# வாரிக் கொடுப்பாள் வாராகி



கவிமாமணி
இலந்தை
சு
இராமசாமி

# வாரிக் கொடுப்பாள் வாராகி

## (துதிப் பாடல்கள்)

கவிமாமணி இலந்தை சு இராமசாமி

***சுந்தர் பதிப்பகம்***
***2,29வது தெரு***
***தில்லைகங்கா நகர்***
***சென்னை- 600061***
***044-22671249***

**BIBILIOGRAPY**

| | | |
|---|---|---|
| **YEAR** | : | **2018** |
| **COPY RIGHT** | : | **THE AUTHOR** |
| **NAME** | : | **VAARI KODUPPAAL VARAHI** |
| **AUTHOR** | : | **KAVIMAMANI**<br>ILANTHAI S RAMASAMI |
| **TYPE** | : | **POEMS** |
| **GENRE** | : | **DEVOTIONAL** |
| **PAGES** | : | **116** |
| **SIZE** | : | **A4** |
| **PUBLISHER** | : | **THE AUTHOR**<br>**SUNDAR PATHIPPAGAM**<br>**2,29TH STREET,**<br>**THILLAI GANGA NAGAR**<br>**CHENNAI-600061, INDIA** |
| **PRICE** | : | **Rs. 120** |

**No part of this publication be copied or printed without the written permission of the author except fot the purposes of book review.**

# சமர்ப்பணம்



## ஸ்ரீ பூர்ணாநந்தர்

யார்தான் அவரின் எதிர்நிற்பார்?
யார்தான் அவரின் ஞானத்தின்
சீர்மை பெற்றார்? சிதாநந்தர்
சீட ராகி ஸ்ரீவித்யை
வேர்விட் டெழும்பத் துணைநின்று
விரிவாய் நூல்கள் எழுதியவர்
பூர்ணா நந்தர் , பரமகுரு
பொற்பா தத்தில் சமர்ப்பணமே!

# முன்னுரை

இந்நூலில் இருக்கும் பாடல்கள் வெவ்வேறு சந்தர்ப்பங்களில் அவளருளால் எழுதப்பட்டவை. என்ன எழுதுவது என்று தோன்றாத நிலையிலே இன்ன எழுது என மனத்துக்குள் ஒரு உத்தரவு தோன்றும். அதை எழுதுவேன்.

உத்தரவு எப்படி வரும் என்று தெரியாது. எவர் மூலமாகவாவது வரும். அல்லது தானாக வரும். வாராகி நக்ஷத்திர மாலையையும் வாராகி அந்தாதியும் எப்படி எழுதப்பட்டன என்னும் விளக்கம் நூலுள் கொடுக்கப்பட்டுள்ளது. வாராகி ஊஞ்சல் உத்சவம் நடத்தப் போகிறேன் எனக்கு வாராகி ஊஞ்சல் எழுதித் தரமுடியுமா என ஒரு அன்பர் கேட்டதன் விளைவு ஊஞ்சல் பாடல் எழுதப்பட்டது. ஊஞ்சல் எழுதும் போதே கோலாட்டம் எழுதவேண்டும் என்று தோன்றியது.

அதன் பிறகு வாராகி திருத்த சாங்கம், வாராகி நவரத்தினமாலை, வாராகி கும்மி, வாராகி தெம்மாங்கு, வாராகி திருப்பள்ளியெழுச்சி, வாராகி கீர்த்தனை, வாராகி கோலாட்டம், தேர்ப்பந்தம், திருக்கண்ணியல் வகுப்பு ஆகிய பாடல்கள் உருவாகின.. தேர்ப்பந்தம் தவிர வேறு பல சித்திரகவிகவிகளையும் எழுதிச் சேர்த்தேன்..

அதன் பிறகு உள்ளுணர்வின் உந்துதலால் சிற்றிலக்கியப் பிரபந்தங்களில் சிலவற்றை வாராகி மீது எழுத வேண்டும் என்று தோன்றியதால் வாராகி பள்ளு எழுதினேன். முக்கூடற்பள்ளு என்னும் நூலில் வரும் ஆற்றுவெள்ளம் நாளைவரத் தோற்றுதே குறி என்ற பாடலின் அடிப்படையில் எழுதப்பட்டதுதான் அது. வாராகியிடம் கேள்வி கேட்டுப் விடைபெற்று, வினா விடையாக அமையும் மாதிரி எழுதியதுதான் வாராகி சம்வாதம். வாராகி வினா விடை என்றுகூடச் சொல்லலாம். அடுத்து வாராகி கவசத்தை வித்தாரமாக எழுதாமல் சுருக்கமாக எழுதியிருக்கிறேன். என்ன கொடுப்பது எப்படிக் காப்பதென்பதெல்லாம் அவளுக்குத் தெரியும் அதனால் ஒட்டு மொத்தமாகக் கேட்டிருக்கிறேன். தமிழ் இலக்கியத்தில் இரட்டைமணி மாலை என்பது ஒரு பிரபந்தம். வெண்பா கட்டளைக்கலித்துறைப் பாடல்கள் அடுத்தடுத்து வருமாறு அமைக்கப்படுவது. ஆனால்நான் இரட்டைமணிச் சிந்து எனும் புதுவகையில் சமநிலைச் சிந்து ஆனந்தக்களிப்பு வகைகள் அடுத்தடுத்து வரும் வண்ணம் எழுதியிருக்கிறேன். ஏற்கனவே

சந்தவசந்தம் கூகுள் குழுமத்தில் முத்தமிழ் மும்மணிச் சிந்து எழுதி இவ்வகைப் புதிய இலக்கியத்திற்குக் கால்கோள் நட்டுவைத்தேன். அதையொட்டி இங்கே வாராகி இரட்டைமணிச் சிந்து எழுதப்பட்டுள்ளது.

அருணகிரிநாதர் வேல்விருத்தம், மயில் விருத்தம் எழுதியதைப்போல இங்கே வாராகி உலக்கை விருத்தமும் மகிட விருத்தமும் எழுதப்பட்டுள்ளன. வாரகி குங்குமத்தின் மகிமையை வாராகி குங்குமம் தெரிவிக்கிறது. சவ்வாது விடு தூது என்னும் நூலை ஒரு புலவர் எழுதியிருக்கிறார். அந்நூல் இப்பொழுது கிடைக்கவில்லை. எனவே வாராகிக்குத் தூது விடுகிற மாதிரி சவ்வாது விடு தூது எழுதியுள்ளேன். . சென்னையில் அபிராமபுரம் முதல் கிழக்குத்தெருவில் உள்ள பச்சையம்மன் கோவிலில் குடிகொண்டிருக்கும் வாராகி அம்மனுக்குச் சவ்வாதுவைத் தூது விடுவதாக அமைந்துள்ளது பாடல். ஏன் சவ்வாதுவைத் தேர்ந்தெடுத்தேன் என்றும் மற்றத் தூதுகள் ஏன் பயன்பட மாட்டா என்றும் வாராகி கோயிலுக்கு எப்படிச் செல்வதென்றும், எத்தருணம் செல்வதென்றும் வாராகியிடம் என்ன செய்தி சொல்லி என்ன பெற்று வருவது என்றும் எழுதப்பட்டுள்ளன.. இவைதவிர வாராகி பன்னிரு திருநாமங்கள் போற்றியாகவும், தஞ்சை பெரிய கோவில் வாராகியிடம் ஒருவரை ஆற்றுப்படுத்தும் வண்ணம் வாராகி ஆற்றுப்படையும் எழுதினேன். கிராமப்புறங்களிலே மருளாடிகளின் மேல் தெய்வத்தை வரவழைப்பதற்காக அந்தந்த தெய்வங்களுக்கு ஏற்றாற்போல வரவு பாடுவார்கள். சாஸ்தா வரவைக் கேளாய் அகஸ்தியரே சாஸ்தா வரவைக்கேளாய் என்பது அப்படிப்பட்டது. அவ்வகையில் வாராகி வரவு எழுதினேன்.. வாழ்த்து மங்கலத்தோடு இந்நூல் நிறைவுறுகிறது நினைத்ததைச் சிரமமில்லாமல் எழுத வைத்த வாராகியின் அருளை நினைந்து வியக்கிறேன். வார்த்தைகளை அள்ளிக் கொடுக்கிற தெய்வமவள்.

வாராகி அன்பு மயமான தெய்வம். பயங்கரமான செயல்களைச் செய்யக் கூடிய தெய்வமாகச் சித்தரித்து அச்சப்படுத்த வேண்டிய அவசியமில்லை. வாராகி நீசத்துக்குத் துணை போகமாட்டாள். நேர்மைக்குத் துணைபோவாள்.

அம்மையை வணங்குங்கள். ஆனந்தம் பெறுங்கள்.

பாடல்களைப் படியுங்கள். பயனடையுங்கள்.

அன்புடன்,

**இலந்தை சு இராமசாமி**

2,29வது தெரு, தில்லைகங்கா நகர், சென்னை-600061

# பொருளடக்கம்

# வாராகி திருப்பள்ளியெழுச்சி

கிழக்கு வெளுத்தது கதிரவன் எழுந்தான்
கிளர் கொண்டைச் சேவலும் கூவிற்றுக் கேளாய்
வழக்கமாய்க் காகமும் கதிரினை நோக்கி
வரவுகள் பாடியே மகிழ்வதைக் காணாய்
கொழித்திடும் வாரிதி அலைகளின் மடிப்பில்
குணதிசைக் கதிரவன் கிரணங்கள் பொழிந்தான்
விழித்தெழு பூரணி வாராகித் தாயே
விம்மிதமே பள்ளி எழுந்தரு ளாயே! 1

அம்மையே உன்றனின் ஆலய வாசல்
அன்பர்கள் பெருந்திறள் அடர்ந்துளர் பாராய்
தம்மரும் பசுக்களில் பாலினைக் கறக்கத்
தகரக் குவளையுடன் சார்ந்தனர் கோனார்
செம்மையாய் வாசலில் கோலமும் போடத்
தேன்மொழி மங்கையர் சூழ்ந்தனர் இங்கே
எம்மையும் புரப்பதற் கேற்றுள தேவி
எம்மரசி பள்ளி எழுந்தரு ளாயே! 2

இரவெலாம் பூசனை செய்திடும் அன்பர்
இன்னுறக் கம்பெற இடைஞ்சல் செய்தாரோ?
வருகெனைக் காவென இரவழைப் பேற்று
வலிந்து நீ சென்றதால் களைப்படைந் தாயோ?
சுருதிகள் சேர்ந்திட மேளதா ளங்கள்
தொம்தொம்தொம் தொம்மென ஒலித்திடல்
கேளாய்
வருதியெம் தாயெழில் வார்த்தாளி அம்மே
வராகமுகி பள்ளி எழுந்தரு ளாயே! 3

கிரிச்சக் கரரதம் வாசலில் ஆணை
கேட்டிட வந்தெதிர் பார்த்துள தம்மா
மருப்புடை கரி, அரி புலிபரி, மகிடம்
வாகன வரிசைகள் வாசலில் அம்மா
நிருத்தங்கள் ஆடிடும் யோகினிக் கூட்டம்
நின்றனின் வாசலில் காத்துநிற் கின்றார்
சிரித்து நீ எழுந்திரு வாராகித் தாயே
தெய்வதமே பள்ளி எழுந்தரு ளாயே! 4

தாமரை மொட்டுளே தங்கிய வண்டு
தான்வெளி வந்திவண் பாடுதல் கேளாய்
மாமறை ஓதியே மறையவர் வந்தார்
வான்தமிழ் பாடியே வந்துளார் பாணர்
நேமாய்ப் பூசனை செய்திட வேண்டி
நிற்கிறார் பூசகர் வாயிலின் ஓரம்
தாமதம் ஏனினி? தண்டநா தாநீ
சத்தியமே பள்ளி எழுந்தரு ளாயே! 5

# வாராகி திருநட்சத்திர மாலை

திருநட்சத்திரமாலை என்பது தமிழ்ச் சிறுபிரபந்தங்களில் ஒரு வகை. பல திருநட்சத்திர மாலைப் பாடல்கள் தமிழ் இலக்கியத்தில் உள்ளன. அவை பெரும்பாலும் அந்தாதியாக அமைவதில்லை. ஒவ்வொரு பாடலிலும் ஒருநட்சத்திரத்தின் பெயர் வரிசைக் கிரமமாக வரும். அந்தாதியாக அமைந்தால் சிறப்பு. 2010ம் ஆண்டில் எனக்கு கோலன் புற்றுநோய் அறுவை சிகிச்சை செய்வதற்கு முன்பு “என் தந்தைக்கு சிக்கல் இல்லாமல் எல்லாம் நலமாக முடிந்தால் என் தந்தையை வாராஹி அந்தாதி எழுதச் சொல்கிறேன்” என்று வேண்டிக்கொண்டான் என் மகன். . முதல் கட்டத்திலேயே கண்டுபிடிக்கப்பட்டு விட்டதால் அறுவை சிகிச்சை நலமாக முடிந்து நான் பூரண நலம்பெற்றேன். அதைத்தொடர்ந்து வாராஹி அந்தாதி எழுதத்தொடங்கினேன். 14 பாடல்கள் எழுதிமுடித்த நிலையில் அமெரிக்கா வந்துவிட்டேன். அந்தாதி எழுதி வைத்த ஏடு தொலைந்துவிட்டது. எவ்வளவு தேடியும் கிடைக்கவில்லை. 27பாடல்கள் தாரக அந்தாதியாக எழுதுங்கள் போதும் என்று குரு சொன்னார்.. அப்பொழுது திருநட்சத்திரமாலை வடிவில் அந்தாதியாக எழுத வேண்டும் என்று எண்ணம் எழுந்தது. சற்றுக்கடினமான பணி.

இந்த நூலில்

வாராஹியைப் பற்றிய விவரங்கள் முடிந்த அளவு வரவேண்டும்

ஒவ்வொரு பாடலிலும் வரிசைக்கிரமமாக ஒரு நட்சத்திரத்தின் பெயர் வரவேண்டும். அது பாடுபொருளுக்கு ஏற்ப அமையவேண்டும்.

அந்தாதியாக அமைய வேண்டும்.

மாறுபட்ட கருத்துக்கள் இல்லாமல் உபாசகர்கள் ஏற்றுக்கொள்கிற வகையில் அமைய வேண்டும்.

எழுத்தெண்ணிக்கை கொண்ட கட்டளைக் கலித்துறையில் அமைய வேண்டும்.

அதிகக் கட்டுப்பாட்டுகள் என்பதெல்லாம் அன்னை வாராஹியின் அருள் இருக்கும் போது என்ன செய்ய முடியும்? எந்தத் தடங்கலும் இன்றிப் பாடல்களை மளமளவென்று எழுத முடிந்தது. வாராஹி உபாசனையைப் பற்றி ஸ்ரீதுர்க்கைச் சித்தர் எழுதியுள்ள புத்தகமும் ஸ்ரீ சீனிவாசராகவன் என்பவர் எழுதிய புத்தகமும் அமரர் நாராயண பாரதி எழுதியுள்ள வில்லும் அம்பும் என்னும் புத்தகமும் விவரங்களைத் திரட்ட உதவின. வாராகி உபாசனை செய்யும் எனது மகன் சீநிவாசராகவன் பல அரிய விவரங்களைக் கூறினான்.

வாராகிமாலை, துர்க்கைச் சித்தர் எழுதியுள்ள வாராகி ஸ்தோத்திரம், கவிஞர் நாராயண பாரதி எழுதியுள்ள வாராகி ஆற்றுப்படை, சாதுராம் சுவாமிகள் இயற்றிய வாராகியைப் பற்றிய பாடல் ஆகியவை தவிரத் தமிழில் வாராகியைப் பற்றிக் கவிதை நூல்கள் வேறு அதிகம் இல்லை எனத் தெரிகிறது.

மதுரகவி என்னும் பெருங்கவிஞர் திருமாலின் மேல் திருநட்சத்திரமாலை எழுதியிருக்கிறார். இந்தத் திருநட்சத்திரமாலை எழுதுவதில் அது எனக்கு வழிகாட்டியாக அமைந்தது. அவர்கூட அந்தாதியாக அதை எழுதவில்லை. சில நட்சத்திரங்களுக்கு அவர்கையாண்ட உத்தியைப் பயன்படுத்தியிருக்கிறேன்.

இத் திருநட்சத்திர மாலை எழுத ஊக்கமளித்ததோடு மட்டுமல்லாமல் கையெழுத்துப் பிரதியைப் படித்து ஆக்கபூர்வமான ஆலோசனைகள் வழங்கி ஆசீர்வதித்த குரு (ஸ்ரீஆனந்தாநந்தநாதர்) ஸ்ரீ ஆனந்தாம்பா) அவர்களுக்கு எனது நன்றி.

**வாராகி**

சப்த மாதாக்களில் ஐந்தாவதாக அமைந்து அருள் புரிபவள்.

கனிவு ஒருபுறம் கடுமை ஒருபுறம் காட்டுபவள். பக்தர்களைப் பொறுத்தமட்டில் அவள் அருளரசி. ஆனால் பக்தனிடம் தவறு கண்ட இடத்துக் கடிதோச்சி மெல்ல எறிபவள். ஆம். தண்டிப்பவள். அதனால் தண்ட நாதா என்று பெயர் பெற்றவள். ஆனால் தண்டனையையே சாதகமாக்கி அருள்

செய்பவள். அவள் லலிதா மஹா திரிபுர சுந்தரியின் படைத்தளபதி. ஆனாலும் லலிதையின் ஓர் அங்கமாகவே திகழ்பவள். தேவி மஹாத்மியத்தில் இதற்கான ஆதார மிருக்கிறது. என்னை எதிர்க்க இத்தனை பேரா என வினவிய சும்பன் முன்னே வாராஹி முதலிய தேவிகளை தன்னுள்ளே ஈர்த்துக்கொண்டு தனியளாக அரக்கனை எதிர்த்தாள் தேவி.

ஸ்ரீ லலிதாம்பிகையின் வாசஸ்தலமான சிந்தாமணிக் கிரஹ நுழைவாயிலில் வாசம் செய்யும் நாயகி வாராகி. மஹாபத்ம அடவியில் வடகிழக்கு மூலை அவளது இருப்பிடம் என்றும் சொல்லப்படுகிறது. தாம் செய்யும் செயல்களுக்கேற்ப பல பெயர்கள் , பல வண்ணங்கள், கரங்கள், ஆயுதங்கள், வாகனங்கள் கொண்டு விளங்குகிறாள்..

அவள் பவனிவரும் ரதத்திற்கு கிரிசக்ரம் என்று பெயர். "கிரிசக்ர ரதாரூடா தண்டநாதா புரஸ்கிருதா" என்கிறது லலிதா சஹஸ்ரநாமம். திருவானைக் காவில் அருள்தரும் நாயகி அன்னை அகிலாண்டேஸ்வரி ஸ்ரீ வாராகியின் அம்சம் கொண்டவள் என்றும் அவளது உக்கிரத்தைத் தாடங்கம் அணிவித்து ஆதிசங்கரர் தணித்தார் என்றும் கூறப்படுகிறது.

கடலுக்குள் ஆழ்ந்திருந்த பூமியை திருமாலின் வராஹ வடிவில் தமது கொம்புகளுக்கிடையில் மீட்டவள் அவளே என்று சொல்லப்படுவதுண்டு.

ஆஷாட நவராத்ரி நாயகி வாராகி.

வராஹம் எப்படிப் பூமியைப் பிளந்து கிழங்கைக் கெல்லி எடுக்குமோ அவ்வண்ணமே நமது அகந்தைக் கிழங்கைத் தோண்டி எடுப்பவள் வாராகி. அதுமட்டுமல்ல. தன் பக்தர்களின், பாபங்கள், முற்பிறப்பின் தீவினைகள் ஆகியவற்றை அகழ்ந்தெடுத்து அழிக்கிறாள்.

ஆக்ஞா சக்கரத்தில் நின்று ஆட்சி புரியும் வாராகி மனம் ஒன்றி ஞானம் பெற வழிவகுக்கிறாள். வாக்கருளுவதில் வாராகிக்கு நிகர் அவளே!. வாதப்போரில் தன்னுடைய பக்தன் தடுமாறாமல் எதிரியின் மனத்தை மயக்கி பக்தனுக்கு வாக்கருளுகிறாள். "வாராகிக் காரனோடு வாதாடாதே" என்று இதனால்தான் சொல்லப்படுகிறது. ஐயப்படாது அகத்திருத்துவோருக்கு எய்தும் நலங்கள் ஏராளம்

பஞ்சமி, அஷ்டமி நவமி அவளைத் தொழ ஏற்ற திதிகள். அப்படியென்றால் மற்ற தினங்களில் தொழக்கூடாது என்பதல்ல. அம்மூன்றும் விசேஷ தினங்கள்."குருவின்றிக் கொடுக்காது. குருவிருந்தால் கெடுக்காது" என்பது எல்லா உபாசனைகளுக்கு ஏற்ற முதுமொழி. இது வாராகி உபாசனைக்கு இன்னும் கொஞ்சம் தூக்கலாகவே பொருந்தும்.

உபாசனை இன்றியும் தொழக்கூடாதா?

ஏன் கூடாது? அவள் காதுகள் இரண்டும் நமது வேண்டுதலுக்காகத் திறந்தே இருக்கின்றன.

பயந்தீர, வாதில் வெல்ல, இழந்தவை மீட்க,பகை வெல்ல, துணிவு கொள்ளவேண்டுமென்றால் தோத்திரம் செய்து தொழுது வேண்டலாம்.

அதற்கு ஒரு படிக்கட்டுத்தான் இந்த வாராஹி திருநட்சத்திர மாலை.

# திருநக்ஷத்திர மாலை

**காப்பு**

சிந்தா மணிக்கிருகத் தேர்வாசல் வாசம்செய்
நந்தா மணிவிளக்கு நாயகியாள்- முந்துபடை
"**வாராஹி தாரக அந்தாதி** " நான்பாடக்
காரானை பொற்பாதம் காப்பு

**நூல்**

உலகம் நிலையாய் உருளப் புரிந்தே உதவியவள்
கலகம் எதுவும் கழல்பணி பக்தன் கதவிருந்து
விலகும் படிக்கு விதிக்கும் **அசுவதி** வித்தகியாள்
இலகும் நலத்தாள் இதம்புரி வாராஹி ஏத்துவமே! 1
(அசுவதி- அஸ்வாரூடா

ஏத்துப் புரக்கும் இனிய தளபதி, ஏற்புடனே
காத்துக் கருப்பால் கலங்கா திருக்கும் கதிதருவாள்
யாத்த கவிதை அனைய ஒழுங்கினில் அன்**பரணி**
பூத்துச் சிரிப்பாள் பொருந்திடும் வாராஹி பூரணியே 2

அணியாய் இருகரம் அங்குச பாசம் அமைந்திருக்கப்
பணியார் தமையே பயப்படச் செய்யும் படைகளுடன்
திணியார் வலிமை திருக்**கார்த் திகை**யொளித் தேசுடனே
துணையாய்த் தொழுவோர் சுகம்பெற வாராஹி
தோற்றுவளே!3

தோற்றும் சிரசில் உரோகிணி காந்தன் சுடர்விடவும்
ஊற்றும் பசுமை உடல்நிற மாக ஒளிவிடவும்
ஏற்றும் விழிகள் எரியும் கனிவும் இழைத்திடவும்
ஆற்றும் அழகில் அமர்கிறாள் வாராஹி ஆனந்தமே! 4

ஆனந்தம் நல்கும் அருளுடை அம்பிகை , அற்புதமாய்த்
தானந்த மான **மிருக சிர**த்தாள் சதுர்புஜத்தாள்
ஏனிந்த வண்ணம் எதிர்த்தோம் எனவே எதிரிகளும்
வானந்தம் காணவைப் பாளெங்கள் வாராஹி மாணிக்கமே! 5

மாணிக்கக் கண்கள் மரகத மேனி, வராஹமுகம்
ஆணிப்பொன் மேனியன் **ஆதிரை** யானும் அதிசயிக்கப்
பேணிக்கொண் டுள்ள பெருநெடுந் தோள்கள்,, பிறைநகங்கள்
காணக்கண் கோடியும் வேண்டும்நம் வாராஹி காண்பதற்கே!
6

காண்பதற் கிங்கே கடுமை எனவே கருதுபவர்
மாண்புப் **புனர்வசு** மன்னவன் வில்லம்பில் வந்திடினும்
தீண்டும் கடுமைகொள் தேவனென் றேமனம் சிந்திப்பரோ
பூண்பலா போன்றநற் பொற்பினள் வாராஹி போர்மகளே! 7

போர்மகள், ஞானப் புகழ்மகள், வேதப் புனிதமெலாம்
தேர்மகள் செம்மஞ்சள் பூசம்பந் தத்தினள் சேர்சினத்தில்
வேர்வரை சென்றே எதிரியை வீழ்த்தும் வினைகளிலே
நேர்மகள் வீரம் திகழ்மகள் வாராஹி நேசத்தளே! 8

நேசத்தள் **ஆயிலி யம்**திரு நெஞ்சத்தள், நேருமுப
தேசத்தில் பாசத்தள், சேர்மணி தீபத் திருநகரில்
வாசத்தள், அன்பு வடிவத்தள், மாறி மறித்துநிற்கும்
நீசத்தை வீழ்த்தும் நியாயத்தள் வாராஹி நிர்மலையே! 9
(ஆயிலி - தாய்வழிப் பிறவாதவள்)

மலைகளும் தோற்கும் மதர்த்த வடிவாள் மறித்திடும்போர்க்
கலைகளும் தா**மகம்** கண்டே சுருதிக் கழல்பணியும்
அலைகடல் பொங்கி அலைப்ப தெனவரும் ஆழ்துயர
வலைகளைப் பிய்த்தே எறிவள்நம் வாராஹி வாழ்வளித்தே 10

அளித்திடும் வெற்றி அவள்பதம் என்றே அறிந்துகொண்டு
களித்திடும் அன்பர் கனிவுடன் கற்**பூரம்** காட்டிடுவார்
வளைத்திருள் வந்திடும் மாலை கழிந்த வளரிரவில்
திளைத்து வணங்குதல் செய்கநம் வாராஹி தெய்வத்தையே111

தெய்வத் திருபஞ்ச பாணத்தில் தோன்றிச் சிறப்புடனே
செய்ய கிரிசக்ரத் தேர்ரதம் ஊரும் திரிநயனி
எய்தும் விவாதத் தெதிரி ஜெயக்கொடி ஏற்றிடுமுன்
உய்வளிப் பாளன்பர்க் கூட்டுவள் வாராஹி **உத்தரமே** 12

உத்தரம் போலே உறுதியிற் காத்திடும் உத்தமியாள்
பத்திர மாகப் பயங்களைப் போக்கிப் பரிசளிப்பாள்
**அத்தமு**ம் ஆதியும் ஆகியே தம்மரும் அத்தங்களில்
அத்திரம் ஏந்தி அருளுவள் வாராஹி ஆதரித்தே! 13

ஆதரித்(து) ஆக்கம் அளித்தே புரப்பவள் ஆயசக்தி
மாதரில் ஐந்தாம் வரிசை பெறுபவள், வாஞ்சையுடன்
ஓதரும் ஞானம் உதவும் வி **சித்திரை**, ஒப்பரிய
சாதகம் நல்கிடும் தந்திரம் வாராஹி சாதிப்பளே! 14

சாதிக்க வேண்டும்சொல் தர்க்கத்தில் என்கிற தாகமுளோர்
வாதிக்கும் துர்நச்**சு வாதி** பயந்து மயங்கிடவே
ஆதிக்கம் நல்கிடும் வார்த்தாளி போற்றி அடிபணிந்தால்
சோதிக்கும் போது துயரற வாராஹி தோன்றுவளே 15

தோன்றும் வடிவும் சொலமுடி யாத தொகைவகையாய்
ஊன்றும் பயிர**வி சாகம்** பரியென உண்டுபல
ஆன்ற திருப்பெயர் அன்பர்கள் பாடி அடிபரவ
மூன்று திருவிழி யாள்நிறை வாராஹி முன்னிற்பளே! 16

முன்னிடும் அந்தினி ரும்பினி ஜம்பினி மோஹினியாள்
மின்னலாய்ப் பாய்ந்து விசுக்கிரன் தன்னையே வீழ்த்தியவள்
மன்னிடும் கா**ம னுடம்**பெரி செய்த மலைச்சிவனும்
நன்னய மாய்ப்புகழ் நல்கிடும் வாராஹி நாயகியே! 17
அனுடம்

நாயகி, பஞ்சமி நற்தண்ட நாதா நலமருளும்
தாயகி வார்த்தாளி பஞ்சமி தாக்கிடும் , சண்டையிலே
போயெதிர் நின்று பொருது நம் **கேட்டை**ப் பொசுக்கிடுவாள்
ஆயநற் செல்வம் அளித்திடும் வாராஹி ஆரமுதே! 18

ஆரமு தேயென அன்பர் தொழுதே அகமகிழ,
சேரமு தாகத் திகழ்கிற ஆக்ஞா திகிரியிலே
ஓரமு தாக மனத்தை அடக்க உதவிடுவாள்
பேரருள் **மூலப்** பிழம்பவள் வாராஹி பேசுவளே! 19

பேசுவள் சொப்பனப் போதில் மிகுந்த பொலிவுடனே,
வீசுவள் **பூராடம்** பத்தில் கருவம் மிகுந்தவரை
பூசுவள் வெற்றிப் பொடியள்ளி, உண்மைப் புனிதமிலா
மாசுகள் நீங்கிய நெஞ்சினில் வாராஹி வாழுவளே! 20
(குறிப்பு- பூரா டம்பத்தில் )

வாழும் பொழுதினில் வந்தடி வீழும் மனிதருக்குச்
சூழும் நலங்கள் தொகுத்துக் கொடுப்பாள், துணையிருப்பாள்
ஊழில் அலுத்திருத் ராஷாடத் தம்மையை உள்தொழுவீர்
ஆழ நினைப்பீர் அரியநம் வாராஹி அன்னையையே!! 21
(உத்திராஷாடம்- உத்திராடம் - ஆஷாடம் -ஆடிமாதம்)

அன்னை, வராஹன் அருந்**திரு வோணன்** அரியவனாய்
முன்னைப் புவியைக் கடலடி மூழ்கி முகந்தெடுத்தாள்
தன்னை வணங்கிடும் பக்தர்கள் சங்கடம் தானழித்தே
அன்னது மீளா தருளுவள் வாராஹி ஆட்படவே 22

படவிட்ட வட்ட ப**லவிட்ட** சக்கரப் பாதையிலே
விடவிட்டு விட்ட விதியட்டுத் தீய வினைதடுப்பாள்
படைமுட்டு தீமை பலப்பட்ட போது படையெடுத்தே
உடைபட்டுப் போக ஒழித்தவள் வாராஹி உத்தமியே!23

உத்தமி, எல்லா உலகும் பயந்தே உதறும்படி
சத்தமிட் டேவந்த ரக்தபீ ஜன்தனைத் தண்டித்தவள்
புத்திகெட் டேநஞ் **சதையம்** மதுவாய்ப் புகலுகிற
பித்தினை வீழ்த்திப் புரந்திடும் வாராஹி பேரருளே 24

பேரரு ளாட்டி, பதின்மூன்றும் நூறும் பிழையறவே
யாருரைப் பாரவர் முன்னே மகிழ்வாய் அவள்நடப்பாள்
சீரற வெற்**பூரட் டாதி** தருமம் செழிக்கவைத்த
காரணி, பாதம் கருதுக வாராஹி காப்பதற்கே!
குறிப்பு: வெற்பூர் அட்டு ஆதி தருமம் செழிக்க) ` 25

வாரிக் கொடுப்பாள் வாராகி 20

காசுக் கெனவே கழிகிற வாழ்வில் கதித்துவரும்
**மாசுத் திரட்டாதி** மாயப் புரிந்து மறுகுடலில்
வாசம் தவிர்த்திடும் மாமணிப் பாதம் மனம் நினைந்து
பூசை புரிக, புகழ்நிறை வாராஹி போற்றிடவே! 26

(குறிப்பு: மாசுத் திரட்டு ஆதி மாய)

போற்றுவ **ரேவதி** யும்படி நெஞ்சில் புகலுவரே
ஏற்றுவரே மனம் எண்ணுவ ரே உள் இழிவுகளை
மாற்றுவ ரே யவள் மாணருள் நெஞ்சிடை மாந்திடுவர்
ஆற்றும் அருளால் அடைவர்பின் வாராஹி ஆளுலகே!27

**நூற்பயன்**

வாராஹி தாரக மாலையை நெஞ்சிலே
ஆரா தனைசெயும் அன்பர்க்கே- நேரான
உச்சப் பரிசாம் உயர்முக்தி தானளிப்பாள்
இச்சக்திக் கில்லை இணை!

# வாராகி பஞ்சகம்

யாரா கிலும்தம் அவதிகள் நீங்க , அகம்கனிந்தே
வாராகி பாதம் வணங்கிட அன்னார் மனவிழைவைத்
தாராதி ராள்அன்பில் தாங்கா திராள்தன் தயவுவிழி
பாராதி ராள்உள் பரிவாய் இருக்கின்ற பஞ்சமியே! 1

பஞ்சமி, பைரவி , பாசாங் குசைஉள் பரிந்தளிக்கக்
கஞ்சமி  லாதாள் கருடனில் ஏறிக் ககனமெலாம்
விஞ்சை யுலாவரு வித்தகி, வாராஹி, வேண்டியடி
தஞ்ச மெனவரு வோர்தமைத் தாங்கும் தயாபரியே! 2

பரியேறு வாள்,சினம் பாய்ந்து வருகிற பாரிசத்தில்
அரியேறு வாள் எரு மையேறு வாள், முன் அதிரவரும்
கரியேறு வாள்,வன் புலியேறு வாள்எதிர் காய்பவரை
எரியேறச் செய்தே எழுவாள் நடிப்பாள் எதிர்நிற்பளே! 3

நின்றால் நிலமதி ரும் வெறி கொண்டே நிகழ்பொருவில்
சென்றால் மலையதி ரும்தனைத் தாக்கும் செறுநர்களைக்
கொன்றா லலாது கொதிப்படங் காதாள் குறித்ததனை
வென்றா லலாது விடாள், பகை வீழ்த்துவள் வேரறுத்தே! 4

வேரறத் தோண்டிடும் ஏன முகத்தாள் மிகவிரும்பிச்
சேரரறம் காத்திடும் தேவதை, மிக்கத் தெளிவளித்தே
சோர விடாதொரு சொற்போ ரிடைநமைத் தூக்கிவைக்கும்
ஆரருள் வாராஹி அம்மையின் பாதம் அடைக்கலமே! 5

# வாராகி அந்தாதி

## முன்னுரை

2010ஆம் ஆண்டு எனக்குக் கோலனில் புற்றுநோய் வந்தது, புற்று நோய் அறுவை சிகிச்சை நன்கு முடிந்து என் அப்பாவுக்குப் பிரச்சனைகள் ஏதுமில்லாமல் இருந்தால், " அப்பாவை வாராகி அந்தாதி எழுதச் சொல்கிறேன்: என்று என் மகன் இராகவன் வேண்டிக்கொண்டான். அறுவை சிகிச்சை நன்கு முடிந்தது. பிரச்சனைகள் ஏதுமில்லை. எனவே நான் வாராகி அந்தாதி எழுதத் தொடங்கினேன். 14 பாடல்கள் எழுதினேன் பிறகு அமெரிக்காவுக்குச் செல்ல நேர்ந்தது. அமெரிக்காவில் அந்தாதி எழுதிவைத்த குறிப்பேடு காணாமல் போய்விட்டது குருவிடம் சொன்னபோது. பரவாயில்லை "27 பாடல்கள் வரும் தாரக அந்தாதி திருநட்சத்திர மாலை எழுதுங்கள்" என்றார். அதன்படி வாராகி திருநட்சத்திர மாலையும் வாராகி பஞ்சகமும் எழுதினேன்

ஜூன் 2017ல் தொலைந்து போன குறிப்பேடு தற்செயலாகக் கைக்குக் கிடைத்தது 14 பாடல்களும் மிகச்சிறப்பாக அமைந்திருந்தன தொடர்ந்து எழுதுவதா அல்லது அப்படியே அரைகுறையாக விட்டுவிடுவதா என்று சஞ்சலப்பட்டேன் அன்று மாலை வீட்டின் அருகிலிருக்கும் தடாகக் கரையிலிருந்த இருக்கையில் அமர்த்து இதைப்பற்றி எண்ணிக்கொண்டிருந்தேன். ஏதாவது குறிப்புக் கிடைக்காதா என எண்ணினேன். அப்பொழுது வானத்தை நிமிர்ந்து பார்த்தால் மிக அழகான வாராகி உருவத்தில் ஒரு வராகம் வாலில் ஒரு முடிபோட்டுச் சுற்றிய நிலையில் காட்சி கொடுத்தது. சரி, சூசகமாக உத்திரவு கிடைத்துவிட்டது

என எழுதத் தொடங்கினேன். ஆஷாட நவராத்திரிக்குள் எழுதி முடித்துவிடு என்றான் மகன்.

முதலில் நான் எழுதிய போது எனக்கு வாராகி மந்திர உபதேசம் இல்லை ஆனால் தற்போது உபதேசம் பெற்றிருந்தேன் எனவே மூல மந்திரத்தின் அத்தனை அட்சரங்களும் அந்தாதியில் வரவிழைந்தேன். அது தவிர கேசாதி பாத வர்ணனை ஆயுதங்கள், மாற்றுப் பெயர்கள் அனைத்தையும் கொண்டுவர விரும்பினேன் சிரமமில்லாமல் அமைந்துவிட்டன ஓரிடத்தில் ஒருபாடலை எண்ணம் என்று தொடங்கியிருந்தேன் வண்ணம், கிண்ணம் என்று இரண்டு எதுகைகளைப் பயன்படுத்தினேன் மூன்றாவதாகத் திண்ணம் என்ற எதுகையைச் சரியாக அந்த இடத்திற்கு ஏற்றவாறு பயன்படுத்த இயலவில்லை

அப்பொழுது என் எதிரே எங்கள் பரமகுரு பூர்ணானந்தநாதர் எழுதியுள்ள மந்த்ரார்த்தங்கள் புத்தகம் இருந்தது அதை எடுத்துப்பிரித்தேன். பிரித்த பக்கத்தில் உண்ணம் என்ற சொல் என் கண்ணில் பட்டது. உண்ணம் என்றால் உஷ்ணம் என்று பொருள் அதைப்பற்றி இணையத்தில் ஆய்வு செய்தேன். தேவாரத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. எனவே பரமகுருவின் அருளும் கிடைத்துவிட்டது என எண்ணி அதே சொல்லை அந்தாதியில் பயன்படுத்தினேன் மிகப்பொருத்தமாக அமைந்துவிட்டது.

இந்த அந்தாதியை எழுதிச் சந்தவசந்தம் கூகுள் குழுமத்திலும் முக நூல் குழுமத்திலும் இட்டேன். கூகுள் குழுமத்தில் கவிஞர்கள் சிவ சிவா., கோபால், அனந்த், சரண்யா ஆகியோர் சில திருத்தங்கள்

தெரிவித்தனர். கொள்ளத்தக்கவை கொண்டு அந்தாதியை ஆஷாட நவராத்திரி முடிவு தினத்தில் எழுதி முடித்தேன் அன்னை அருளால் விக்கினமின்றி மிக அழகான அமைந்துவிட்டது.

**சூசகம் காட்டித் தொடரப் புரிந்தநற் சூக்குமத்தின்**
**வாசகம் தானிதில் வந்தது, வேறு வழியிலதாய்**
**யாசகம் கேட்டேன் அவள்தந்தாள், தந்ததை யான்தொடுத்தேன்!**
**மாசகம் காக்கின்ற வாராகி பாதங்கள் வாழ்த்துகவே**

உபாசனை அளித்த குருவுக்கும் குருபத்னிக்கும் நன்றி

## அன்புடன்

# இலந்தை சு இராமசாமி

4-7-2017

# வாராகி அந்தாதி

**காப்பு**

சூசகமாய் என்னைத் தொடரவைத்தாள் வாராகி
வாசகமாய் இங்கே வனைகின்றேன் - யாசகமாய்
வார்த்தைகளை வேண்டுகிறேன், வள்ளல் கணபதியே
நேர்த்திகளை நீயே நிகழ்த்து.

**குரு துதி**

எந்திர மாக இங்கே இயங்கிடும் வாழ்க்கை தன்னைத்
தந்திர மாக ஏதோ  தள்ளியே செலுத்து கின்றோம்
மந்திரம் உபதே சித்தே வாழ்க்கையை மாற்றி வைத்த
சிந்தையில் குடியி ருக்கும் தேசிகர் குருதாள் போற்றி

**நூல்**

உலகங்கள் கோடி ஒரு நிலை யோடே உருளுகையில்
விலகுங்கள் என்றந்த வீதியில் ஓலம் விளைவதில்லை
கலகங்கள் தீரக் கருத்துடன் என்றும் கனிந்த வெற்றித்
திலகங்கள் இட்டுச் சிரிப்பவள் வாராகி தெய்வதமே 1

வதமே புரிவாள், வழிவழி தீமை வனைபவரும்
பதமே பணியும் பரிசினை நெஞ்சில் பதித்திடுவாள்
இதமே புரிவாள், எமக்குப் பிழைசெய் எதிரிகளை
அதமே புரிவாள் அடியருக் கென்றென்றும் ஆனந்தமே! 2

ஆனந்த மார்க்கம் அவளது மார்க்கம், அடைந்துவிடின்
தானெந்த மார்க்கமும் சார்ந்திட வேண்டாம் தரியலர்தம்
ஊனந்த மாக உலர்த்திடும் தேவியை உற்றவர்க்கு
வானந்த வீதி வசப்படும் வாராகி வாழ்த்துவளே! 3

வாழ்த்திட வாயும் வணங்கிடக் கைகளும் வந்து முன்பு
தாழ்த்திடச் சென்னியும் தந்தநம் தாய்பதம் சார்ந்துமனம்
ஆழ்த்திட வேறே அதனினும் மேனிலை யாதுளதோ?
ஊழ்த்தடை யில்லை உறுதி உறுதி உறுதியிதே! 4

உறுதி தளரா உளமும் உணர்ந்தே உரைத்திடுநா
மறதி அடையா வகையும் பெறவே வரந்தருவாள்
அறுதியிட் டன்னை அபயம் எனவே அடைந்துவிடின்
இறுதி வருநாள் எமபயம் போக்கி எதிர்நிற்பளே! 5

நின்றெதிர் தீமை நிகழ்ந்திடும் முன்னே நிறுத்துபவள்
கன்றெதிர் கண்டு கசியும் பசுவெனக் காக்கின்றவள்
மன்றெதிர் வாதம் வருமுனர் மாற்றம் வழங்குபவள்
வென்றெதிர் நிற்பவள், வித்தகி, வாராகி வீரியளே! 6

வீரி, எதிலும் விரைந்து செயல்படும் வீறுடையாள்
சூரி, பயங்கரி, சூலி, புடைத்தெழு சூக்குமத்தாள்.
நாரி, நலந்தரு நாயகி, மங்கலை நானிலத்தே
மூரி அரிமிசை முந்திடு வாள்சினம் மூண்டெழவே! 7

எழவைப்பாள், என்றும் எமக்கு நலம்புரிந் தேதிலரை
விழவைப்பாள், வீழ்த்தி விழுந்தோர் மனத்தில் விழிப்புணர்த்தித்
தொழவைப்பாள், பக்தி சுடர மனத்தைத் துளைந்ததனை
உழவைப்பாள், பைரவி, உன்னதம் தந்தே உயர்த்துவளே! 8

உயர்த்துவள் வாசவி உத்தண்டி, வாராகி உத்தமியாள்
வியர்த்தம் எதுவும் விளையும் முனமதை வேரறுப்பாள்
அயர்த்திடும் போதஸ்வ ரூடா உடனே அருள்புரிவாள்
முயற்சிகள் நன்றாய் முடிப்பாள் வராக முகத்தினளே! 9

முகத்தில் வளைபற்கள் மோந்திடும் மூக்குடன் மூவிழியும்
தகத்தகச் சோதி இரத்ன மகுடத் தனிச்சிறப்பும்
தகர்க்கும் உலக்கையும் சங்குடன் சக்ரம் தனிமழுவும்
அகத்தில் சுரந்திடும் அன்பும் துலங்கும் அருளவளே! 10

அவளே தளபதி ஆவாள் அவளே அணித்தலைவி
அவளே அமர்க்களத் தேறிப் பகையை அதிரவைப்பாள்
அவளே பிரத்யக்ஷ வாராகி, தேவிக் கணுக்கமவள்
அவளே லலிதை அணிநகர் வாயில் அமர்பவளே! 11

அமர்க்களம் உற்றிடில் ஆயிரம் ஆயிரம் ஆகநிற்பாள்
தமர்க்கு நலஞ்செயும் தன்மையி னாளருட் சாதனையாள்
எமனவன் முன்வரின் எம்தமர் என்றே எதிர்நிற்பவள்
எமக்கினி வேறெது வேண்டும் நம் அன்னை இருக்கையிலே!12

இருக்கும் பொழுதும் இனிய பொழுதாய் இயங்கிடவே
உருக்க முடனே உளத்தினில் வாராகி ஓங்கவிடு
தருக்கங்கள் இல்லை சலனங்கள் இல்லை சரிவருநல்
பெருக்கம் நிறையும் பிணியிலை என்றைக்கும் பீடுகளே! 13

பீடு பெருக்கும், பிணிக்குமிவ் வாழ்வின் பிடியகன்றே
கூடு விழுந்திடக் கூட்டினில் மீண்டும் குறுகிவிடா
வீடு கிடைக்கும், விழைவுடன் வாராகி மெல்லியலின்
ஈடுவே றில்லா இணையடி போற்ற எழுமின்களே 14

மின்னலை ஏவி விளையாடு கின்றவள் வித்தையிலே
முன்னிலை சேர்க்கும் முதல்வி அடுபொறி மோதல்களின்
புன்னிலை தாழ்த்திப் பொருள்நிலை காட்டிப் புனிதநெறிக்
கன்னலை ஊட்டிக் கருத்தினில் நிற்பாள் கனிவுடனே! 15

*கனிவுடன் ஐம்கிலெளம் ஐம்மெனும் மந்திரக் காப்பினையே*
தனியிருந் தேசரி யான சமயம் தனில் நினைந்தே
இனிதே நமோவென ஏத்திப் பகவதி என்றுரைத்து
மனத்தில் இருத்த வழங்குவள் வார்த்தாளி வார்த்தைகளே!! 16

வார்த்தாளி என்று வழங்கும் பெயரின் வகைப்படியே
வார்த்தைகள் ஆள வகுப்பாள் எதிரியை வாதத்திலே
வார்த்தை தடுமாற வைப்பாள், அடியர் மயக்கிருளைத்
தூர்த்தருள் செய்வாள், தொழுதென்றும் சொல்லுக தோத்திரமே!

தோத்திரம் செய்து தொழுது பணியத் துணைநிற்பவள்
யாத்திரைப் போதினில் ”வாராகி வாராகி அச்சமின்றிக்
காத்தருள்” என்றிடக் காக்கும் வழித்துணைக் காரியவள்
ஏத்திப் புகழ மகிழ்வள் எழிலார் வராகியளே!! 18

“வராக முகியே, வராக முகியே மகிழ்ந்திசைக்கும்
இராகம் அறியேன், எனினும் உருகி இலகுமனம்
பராவி நெகிழ்ந்து பரவசத் தாழ்ந்து பணியுமிந்தச்
சராசரி என்னையும் தாங்குக” என்பேன் தயைபுரியே! 19

புரியும் செயல்கள் புனிதப் படவே புரிகுவையேல்
அரியள்அந் தேயந் தினியாள் அருள்வாள், அகம் நெகிழ்ந்தே
உருக, “ வருந்தேல் இருந்தினிக் காப்பேன் உறுதி” யென்பாள்
பெருமைகள் யாவும் பெரிதும் கடந்த பெரியவளே! 20

பெரிய செயல்கள் பெருமை கொடுத்திடப் பீடுதரும்
அரிய செயல்கள் எளிதாய் அடைந்திட ஐம்நமஹ
உரிய முறையில் உதவிடும், தீமை ஒழிந்திடவே
தரியலர் கண்டஞ்சம் பேகரம் பற்றுவள் ஜம்பினியே! 21

இனிமை, கடுமை இரண்டும் கலந்த எரிகணையே
மனமோ கவலை விழுஹே துவினை மறித் தருள்வாய்
முனிவை மறத்தில் முகிழ்க்கும் பெருந்திறல் மோஹினியே
இனியிவ் வுலகில் அமைதி நிலவ இனிதருளே! 22

அருள்தரும் ஹஸ்தம் அளிகுணம் காட்டும் அறமலவோ
அரும்பெரும் பேறுகள் அள்ளிக் கொடுக்கும் அகமலவோ
கிரிசக்கரத்தில் கிடுகிடுவென்றே கெலிப்பவளே
திரிமனஸ் தம்பினி சர்வ உலகும் திரிபவளே! 23

பவளக் கொடியே, பராபட்ட ரீகா படைத்தலைவி
துவள விடாமல் தொழுபவர் வாழத் தொடுப்பவளே
குவளை நிறத்தாய் கொடுமனத் துஷ்டர் கொடுக்கறுத்தே
புவனம் புரக்கும் புனிதப் பெரும்புகழ்ப் பூரணியே! 24

அணிசேர் அரக்கர் அலறி நடுங்கி அவதியுறப்
பணிசெய் படைகளைப் பார்வையொன் றாலே பகடையெனத்
துணிவாய் இயக்கிச் சுடர்ப்பிர காசம் தொடுப்பவளே
பிணிசேர் விசுக்ரன் பெரும்படை மாய்த்த பெருந்திறலே! 25

திறலே, திறல்களின் சேர்தொகுப் பேபெருஞ் சீற்றமுளாய்
மறம்சேர் விசுக்ரன் வலிமிகு துஷ்டன் மடமடென
அறப்போர் விடுத்தே அமர்புரி போதில் அவனையுடன்
இறக்கப் புரிந்தாய், இமையவர் போற்றி இசைத்தனரே! 26

இசைத்தனர் தேவர், "எமைக்காத் தவளே, எதிரிலியே
திசைத்தளம் எங்கும் திரிதரு பஞ்சமித் தெய்வதமே
தசைத்திரள் கொள்தண்ட நாதா, அரிக்னீ, தயவுடையோய்
புசித்திடும் பேய்க்கும் விடாத பசிப்பிணி போக்கினையே!" 27

போக்கியம் நல்கும் புரந்தரி, போத்ரிணி, போற்றுகிறோம்
பாக்கியம் பெற்றனம் நாமெனப் பாரில் பரவுகிறார்
ஆக்கினை செய்வாய் அதட்டிப் பரிவுடன் ஆதரிப்பாய்
காக்கிறாய், சர்வமும், வேறெமக் கேதும் கதியிலையே! 28

கதியெனத் தேவர் கழல்பணிந் தாரம்மை காட்சிதந்தாள்
துதிசெய ஏற்புள ஆஷாட மாதம் துலங்குகிற
விதிநவ ராத்திரி வேண்டிப் பரவி விழவெடுக்கச்
சதிவரு சர்வ சழக்குகள் நீக்குவள் சத்தியமே! 29

சத்திய வாக்குத் தருவாள் அதற்குத் தகுந்தபடி
சித்தம் உறுதி வயப்பட வேண்டும் திடமுடனே
நித்தியம் நோக்கி நிகழ்த்திட வேண்டும், நினைவவளைப்
பத்திர மாகப் பதித்திடல் வேண்டும் பலித்திடவே! 30

பலித்திடும் சித்தி படைத்திடும் மந்திரம் பல்முறையே
ஒலித்திட வேண்டும் உபாசனைப் பேறதன் உன்னதமே!
சலித்து முமுக்ஷு தகைமை பெறுமருள் தந்தருள்வாள்
சிலிர்க்கும் விசுத்திக்கு மேலுயர் ஆக்ஞையின் தேவதையே!31

தேவதை உன்றன் திருமுகம் ஞானத் தெளிவளிக்கும்
ஆவ தனைத்தும் அறமே நினைக்கதி யாயடைந்தால்
காவல் மலிநின் இராஜ்ஜியம் எஃகின் கனவுறுதி
மேவிடும், எல்லாம் விசித்திரம், வாராகி வித்தகியே! 32

வித்தக மாய்ப்பல அஸ்த்திரம் கைகளில் வீற்றிருக்க
எத்தனை லாகவ மாக அவற்றை இயக்குகிறாய்
மெத்தவே தம்பனம் செய்தே எதிரிகள் வீழ்த்துகிறாய்
அத்தகு வீரம் அலற அடிக்கும் அவர்களையே! 33

களையைக் களைந்து கதிரை வளர்க்கும் கதிப்பொருளே
களைப்பே பெருகும் களத்தே பொருதும் களைப்பிலியே!
விளைத்த செயலில் விதிர்த்த படைகள் வியப்படைந்தே
வளைய வருவர் மயங்கி விழுவர் வணங்குவரே! 34

வணங்குவர் தேவர் சகல உயிர்கள் மனமுணர்ந்தே,
இணங்குவர் சீக்கிரம் பாதம் தொழுதிட ஏதிலர்கள்,
பிணங்குவர் தம்மையும் வஸ்யம் புரிந்திடும் பெற்றியினைச்
சுணங்குதல் இன்றி எனக்களிப் பாயருட் தூயவளே! 35

தூய மனத்துடன் ஐம்கிலெளம் இட்டகம் தூண்டிவிடின்
மாயம் விலகும், மனமருள் பெட்டக மாய் நெருக்கத்
தாயம் கிடைக்கும் டகடக வென்றே சடுதியிலே
நேயம் கொடுக்கும், நிறைந்திடும் வாழ்க்கையில் நிம்மதியே!36

மதியைத் துலக்கி மனத்தினில் ஹூம்காரம் வந்தொலிக்க
விதியை மயக்கி அதுவிடும் அஸ்த்திரம் வீழ்ச்சியுற
அதிசயம் கூட்டி அருள்தரும் வாராகி அம்மையடி
துதிசெயப் பட்டெனச் சூழ்ந்திடும் ஞானம் சுடர்விடுமே! 37

சுடரே, திருவே, துகளறு கட்டிளஞ் சுந்தரியே
தொடராய் உனதருள் சூக்கும மந்திரம் சொல்பவர்க்கே
இடரெதும் வாரா தெதிர்நின்று காக்கின்ற எம்மரசி
குடரில் பிறவாப் பெருநெறி கூட்டிடக் கோரிக்கையே! 38

கோரிக்கை வைத்தேன், குறிப்பெதிர் பார்த்துக் குறையிரந்தேன்
யாரிக்கை பற்றி அழைத்துன் அருகில் அமரவைப்பார்
சேரிக்கை கூப்பித் தெரிந்தவை சொல்லிச் செபித்திடினும்
பாரிக்கை என்றனின் பக்தன்கை என்றே பரிந்துரையே! 39

உரைக்க உரைக்க உருப்பெறும் மந்திரம், உழைத்துமிக
அரைக்க அரைக்க அருமணம் சந்தனத் தாவது போல்
கரைக்கக் கரைக்கக் கரம்வரும் சித்தி, கடந்துபினும்
சுரக்கச் சுரக்கத் துரிய நிலைக்கவள் தூக்குவளே! 40

தூக்கிடும் அந்நிலை சொப்பனத் தூடே தொடங்கிடினும்
போக்கிடும் போது புனிதப் புலத்திடம் போட்டு வைப்பாள்
வாக்கிடும் யாவும் வசப்படும், அன்னை மனமுவந்தே
ஆக்கிடும் யாவும் அவள்பரம் , அன்னையின் ஆக்கினையே!41

ஆக்கினை என்றே அறிந்தனை, பின்னும் அதுமறந்து
போக்கினை யாயின் பொறுத்திட மாட்டாள் புகலுமருள்
வாக்கினைத் தந்தாள், வரத்தினைத் தந்தாள் வழிமொழியும்
நாக்கினைத் தந்தாள் நமக்கினி வேறெது நானிலத்தே! 42

நிலத்தை அகழ்ந்து நெகிழ்த்திக் கிழங்கெடு நேர்த்தியுள
பலத்தைப் பொருந்திய பற்கள் படைத்தவள், பாழ்படும்
மலத்தை உடைத்து மமதை அகழ்ந்து மணிபுரச்செம்
புலத்தில் இருக்கப் புரிவாள் கவிதை புனைந்திடவே! 43

புனைவுகள் உன்திருப் பொன்னடி போற்றிப் புகழ்ந்திடவும்
நினைவுகள் என்றும் நினது புகழை நிகழ்த்திடவும்
கனவுகள் உள்ளும் கனிந்தருள் செய்யும் கருப்பொருளே
உனைமகிழ் வூட்டிடும் உத்தியும் சற்றே உதவுகவே! 44

உதவிடும் எண்ணம் உளபொழு தேபோய் உதவிடவும்
எதுவரி னும் நின திச்சை எனமுனம் ஏற்றிடவும்
சதமென நின்பதம் சார்ந்து பணிந்து தழைத்திடவும்
விதவித மாக விருதுகள் கூடவும் வேண்டினனே! 45

வேண்டுவ தெல்லாம் மிகத்திடம் கொண்டுள மேனிநலம்
பாண்ட மிதிங்கே அதன் பணி தானே பரிந்துசெயல்
ஆண்டிடும் நெஞ்சத் தமைதி இனிய அகமகிழ்ச்சி
ஈண்டென் செயலால் இறைநிலை எய்தல், இவையருளே! 46

இவையவை என்றிவண் ஏதெது கேட்பினும் என்னிறையே
அவையவை தம்மை அளிப்பது பற்றி அறிந்தவள் நீ
எவை எவை நன்மை எனக்கென நீ மனம் எண்ணுவையோ
அவை அவை நன்றே அளித்திடு கேட்க அறிந்திலனே! 47

அறிந்திலேன் அம்மா அறிவெனும் ஒன்றை, அறிந்தவரை
அறிந்தேன் எனவே அகந்தைப் பிடியில் அகமகிழ்ந்தேன்
மறைந்தவை பாதி மறதியில் மீதி வழிந்துவிட
உறைந்தவை தம்மை உளவென எப்படி ஓதுவனே! 48

ஓதும்படிக்கே ஒருமொழி இன்றே உளதெதுவும்
மீதம் இலைதான், அதில்பெருங் காயம் விழுந்திருந்த
போதம் உளது, பொருந்து மணமும் பொலிகிறதே
ஆதர வாயதைப் பற்றி எழவுன் அருளுளதே! 49

தேடித் திரியாச் சிறப்புள என்னையும் தேடவைத்தாய்
வாடி அலைந்தே வனத்தில் புகுந்து வருந்தவிலை
மூடித் திறந்துயிர் மூச்சை அடக்க முயலவில்லை
பாடித் தொழுதேன், பணிந்தேன் அடைந்தாய் பரவசமே! 50

பரவச மாய்க்கரு மேகம் நிறத்தைப் பகிர்ந்தளிக்க
ஒருவச மான கருங்குழல் மேலே ஒயிலசைய
உருவச மான கரண்டகத் தோற்ற ஒளிமகுடம்
திருவச மாகத் திருமுடி மேலெழில் சேர்க்கிறதே! 51

சேரும் அழகுத் திருப்பிறை மேலொளி சிந்திநிற்கச்
சீரும் சிறப்பும் திகழும் பவளம் திகழ்வரிசை
சாரும் விளிம்பில் தனியழ கேற்றத் தழைவயிரம்
ஆரும் ஒளிதரும் அன்னை சிரசில் அணிமுடியே! 52

முடிந்த வரையில் முகவெழில் சொல்ல முயலுகிறேன்
படிந்த நுதலினில் கஸ்தூரிப் பொட்டு, பகைவர்களைத்
தடிந்த வயிரப் படையெனும் பற்கள் தகைமுகிலைக்
கடைந்த நிறமுகம் கம்பீ ரவெழில் கச்சிதமே! 53

கச்சித மாகக் கதவடை யாவிரு காதுகளும்
எச்சரிக் கையாய் எதிரி அசைவை எடுத்துரைக்கும்
நிச்சய மாய்மூ விழிகளில் ரௌத்திரம், நேசம்வரும்
வச்சிர மூக்கு வருவன மோந்து வழங்கிடுமே! 54

வழங்கும் அளவில் வனப்பெழில் காட்டும் மணிக்கழுத்து
முழங்கும் குரலில் முனிவைக் கலக்கும் , மொழியதிரும்
விழுங்கும் திருவாய் விரும்பிக் கனிவும் மிகவிளம்பும்
ஒழுங்கில் அமைதோள் இயங்கும் மலைக்கும் உயரத்திலே! 55

உயர்ந்து விளங்கும் உரங்கொள் கரங்களில் உற்றிருந்தே
இயங்கும் படைகள் இயக்கிடும் தேவி இலாகவத்தில்
தியங்கும் பகைவர் திரிரதம் கண்டு சிலும்பிடுவர்
மயங்கும் உலகம் வலதிடப் பாக வலிமையிலே! 56

வலிவுடை வாளம்பு சக்கரம் சாட்டை வளர் கதையும்
வலப்புறக் கைகளில் வாகாய் இயங்க, வருமிடத்தே
கிலிதரும் சங்கொடு தாமரை சூலம்வில் கேடயமும்
பொலிவுற ஓர் புலி வாகனம் ஏறுவள் போயமர்ந்தே!! 57

தேவைகருதி உலக்கை கலப்பை திருக்கரங்கள்
மேவிட அங்குசம் பாசம் எடுப்பள் மிளிர்கரங்கள்
ஏவிடும் ஆயுதம் என்னவெப் போதென் றெவரறிவார்
பூவும் ஒருபடை ஆகிடும் அன்னையின் போர்க்களத்தே! 58

போர்க்களத் தில்லாத போதில் அபயம் பொருந்துகரம்
வார்த்தாளி காட்டி வரம்தரு வாளவள் வள்ளலெனச்
சாத்திரம் கற்றவர் சாற்றுவர் உண்டிங்குச் சான்றுபல
காத்திடு வாளவள் கைராசி நெஞ்சில் கருதிடவே! 59

திடமும், பரப்பும் திரட்சிச் செழுமையும் சேர்ந்துயர்ந்த
இடமும் உடைய எழில் கொங்கை மீதில் இரத்தினங்கள்
வடமும், ஒளிரும் மணிபொதி மாலை வரிசைகளும்
அடர்கச்சை பூண்ட அழகும் உரைக்க அரியனவே! 60

அரிதின் அரியள் அரியின் வராஹ அமரினிலே
பெரிய அளவில் பொருதே உதவிய பெற்றியினாள்
உரிய திருமலர் நாபியும் வீர ஒளிவயிறும்
விரியும்கம் பீரமும் வீரமும் எங்ஙன் விளம்புவதே! 61

விளம்ப இயலா விரைவும் பொலிவும் மிகவலிவும்
வளமும் வடிவும் வதிதிருக் கால்கள் வனப்பதையும்
வளியின் விரைவும் வயிரமும் கொள்பத மாண்பினையும்
உளத்தில் பதித்தே ஒருமுக மாய்த்தினம் உன்னுகவே! 62

உன்னை அறிய உணர்த்திடு பாதம், உயர் மறைச்சொல்
தன்னைக் கடந்து தழைத்திடு பாதம், தகதகென
மின்னைக் கரைத்து விளங்கிடு பாதம், மிகநலஞ்செய்
அன்னையின் பாதம் அகம்பதி, ஞான அருள்பெறவே! 63

பெறவே றுளதோ, பிறங்கிடு நூபுரம் பேறுபெற்றே
நெறிசேர் பதத்தில் நிறையணி யாக நிறைந்திருக்கும்
பொறிசேர் அழகைப் புகழ்ந்து வணங்கிடப் போய்ப்பெறவோர்
அறமும் உளதோ? அவள்பதம் நல்கும் அனைத்தையுமே! 64

அனைத்தும் அவளின் அருளென எண்ணி அனுதினமும்
நினைத்து மனத்தில் நிறைத்து, ஜபங்கள் நெறிமுறையே
தினைத்துணை யாகச் செயினும் உறுதித் திறமுணர்ந்தே
பனைத்துணை யாகப் பலன்கள் கொடுப்பாள் பரிவுடனே! 65

பரிமேல் அரிமேல் கரிமேல் புலிமேல் பருந்ததன்மேல்
எருமை மிசைமகிழ்ந் தேறி வருகின்ற ஏந்திழையாள்
உரிமை யுடனே உளம்நினை வோருக் குதவிடுவாள்
உரிய முறையில் உயர்வு பெறுவர் உபாசகரே! 66

உபாசனை தந்த உயர் குரு போற்ற, உவந்தவள்நல்
உபாயம் கனவில் உரைப்பாள் வழிகள் உணர்த்திடுவாள்
கபாலம் பிரம்பு கரத்தினில் ஏந்திக் கடுகிவந்தே
அபாயம் விலக்கி அருள்வாள் அடியருக் காதரவே! 67

தரவென ஓர்கை அபயம் அளித்திடும் தண்ணளியை,
புரவெனச் சொல்லிப் புனிதத் திருப்பதம் போற்றிசெய்தே'
இரவினில் பூசை புரிபவர் மூலத் திருக்குமந்த
அரவை எழுப்புவள் ஆக்ஞைக்கு மேலே அனுப்புவளே 68

புவனம் கொணர்ந்து புதுப்பொலி வூட்டிய பூரணியை
மவுனம் இருந்து மனத்துள் ஜபம்செய்து மந்திரத்தைக்
கவனத் துடனே கருத்தில் இருத்திக் கசிந்துருகித்
தவனமும் மஞ்சள் சிவப்பு மலர்களும் சாத்துகவே 69

சாகச மோயிலை தந்திர மோயிலை சாதனையாய்த்
தேகசம் பந்தத் துடன் புரி செய்கைச் சிறப்புகளோ
ஆகுமென் றெண்ணி அதன்வழி சித்தி அடைவதினும்
ஏகம் அவள்பெயர் எண்ணி ஜபம்செய எய்திடுமே! 70

எய்த நினைப்பவை எல்லாம், முயற்சி எதுவுமின்றி
எய்தும் எனமனம் எண்ணிட வேண்டாம், எடுத்தசெயல்
செய்யும் பொழுதினில் சிக்கல் இலாதவள் செய்திடுவாள்
பொய்யும் புரட்டும் புரிய நினைத்தால் பொசுக்குவளே! 71

பொசுக்கென எல்லாம் புலப்படும் என்றால் புலப்படுமா?
நசுக்கிடும் ஐம்பொறி நாட்டியம் தன்னை நனியடக்கி
வசப்படு வென்றே மனத்தைப் பிடிக்குள் வரவழைக்க
விசுக்கிரன் தன்னை விழவைத்த அன்னையை வேண்டுகவே!72

வேறிலை அன்னை வியன்லலி தாபர மேஸ்வரியாள்
மாறிலை என்பதை மாதா செருக்களம் மீதுரைத்தாள்
கூறுகள் இல்லை குழுக்களும் இல்லை குறித்துடலில்
வீறுகொண் டொன்றாய் விளங்கிடும் சக்தி விகற்பங்களே! 73

கற்ப நெடுநாள் கணக்கிட ஒண்ணாக் ககனவெளி
அற்புதத் திற்கே அசைவும் இயக்கமும் யாரளித்தார்?
முற்பட முற்பட முற்படு கின்ற முதற்தலைவி
சிற்பரை ஞானத் திரிபுரை பக்கம் திகழ்பவளே! 74

திகழ்கின்ற ஸ்ரீபுரப் பூபுரம் வாழும் திருவுடையாய்
புகழ்கின்ற சொல்லில் பொருளாய் இருக்கும் புனிதவதி
நிகழ்கின்ற யாவும் நெறிமா றிடாமல் நிகழ்த்திடுவாய்
அகழ்கின்ற தன்மை அறிவாய் உனக்கே அடைக்கலமே! 75

அடைக்கலம் என்றிட அன்னை அளிக்கும் அபயநெறி
படைக்கல மாகப் பரிந்து புரக்கும் பலன்கொடுக்கும்
தடைப்படும் எல்லாம் தகர்த்திடும், பக்தி தனையறியாக்
கடைப்படு வோருக்கும் காரிய சித்திகள் கைவருமே! 76

வரும்படி கூடும், மனத்தில் வெறுத்த மனிதர்களும்
வரும்படி வேண்டி மகிழ்ந்தே அழைப்பர், மறைந்திருந்த
அரும்படிப் பெல்லாம் அகம்படும், அன்னை அருளிருந்தால்
கரும்படி பற்றிக் கடித்துச் சுவைக்கும் கணக்கதுவே! 77

கணக்கின் தொடக்கம் கணக்கின் முடிப்பு கணக்கிடையில்
இணக்கம் சுணக்கம், பிணக்கம், எனுமிவ் வியக்கமெலாம்
“வணக்கம் எனவே மமதை அடக்கி வணங்குதிரேல்
மணக்க மணக்க வதிந்திட வாராகி மாற்றுவளே! 78

மாற்றுப் பெயர்கள் பலவுள, பாரில் வழங்குவன
போற்றும் சமய ஸங்கேதா சிவை யருள் போத்ரினியாள்
ஏற்றுசங் கேதா மகாசேனை ஆக்ஞாசக் ரேஸ்வரியாள்
சாற்றப் பெயர்கள்பல் லாயிரத் தின்மேல் தகவுடனே! 79

தகவுடன் உன்மத்த பைரவி யாகத் தயைபுரிவாள்
பகர்ந்திடும் சொப்பனந் தன்னில் தகவல் பரிந்தளிப்பாள்
திகைத்திடும் வண்ணம் மறைத்தருள் செய்வாள் திரஸ்கரிணி
வகைவகை அங்க உபாங்கப் பிரத்யங்க மாகவந்தே! 80

வந்தே குழப்பி மயக்கும் வினாக்கள் மனத்திலெழச்
சந்தே கமெலாம் சரிவரத் தீர்த்தே தயைபுரிவாள்
அந்தே அந்தினி யாள்நமை என்றைக்கும் ஆதரிப்பாள்
சிந்தா மணியில்லம் சேர்ந்து வதிதலும் சித்திக்குமே! 81

சித்தில் மயங்கிச் செயலினை வேறு திசைதிருப்பப்
புத்தி மயங்கும் பொருளும் மயங்கும் புனிதவருள்
முத்தியை நோக்கி முதலடி என்றே முனைந்ததனைப்
பத்திர மாகவுள் பக்கம் திருப்பப் பகல்வருமே! 82

வருமே பதிந்த வழித்தடம், முன்பவ்வழி நடந்தோர்
தருபோத னையில் சரியாய் நடக்கும் தகுதிவரும்
பெருமோ கமெனும் பிணியும் அழியும் பிறப்பிறப்பு
வருமோ இனியும்?, வரவேற் புளதவள் வாசலிலே! 83

வாசல் வரையிலும் வந்து படியில் வழுக்கிவிழும்
ஊசல் மனத்தவர் ஓங்கிப் புரியும் உபாசனையில்
பூசல் இருக்கும், புனிதம் இராது, பொசுங்குகிற
வாசம் வருகையில் யார்தான் போடுவர் வாயினிலே! 84

வாய்மணக் கும்படி மந்திரம் சொல்லி மனத்திலிறை
போய்மணக் கும்படி புத்தி செலுத்திப் புனிதமுள
பூமணக் கும்படி பூசைகள் செய்தால் புகழுடனே
நீமணக் கும்படி நின்னை உயர்த்துவள் நிச்சயமே! 85

நிச்சயமாக நியதிப் படிதான் நிகழுமென
எச்சம யத்தும் இசைத்திட வேண்டாம், எமக்கிறைவி
நிச்சய மான நியதியைக் கூட நெறிப்படுத்தி
அச்சம யத்தினில் ஆற்றல் கொடுப்பாள் அமைவுறவே! 86

அமைதி கெடுக்கிற அச்சம் தொலைய அருமருந்தாய்
சமவள வில்செங் கயிற்றில் முடிபல தாமமைத்து
நமதிறை மந்திரம் நாமுச் சரித்து நலம்விழைந்தே
அமைவுறக் கட்டிட அச்சம் தொலைந்திடும் அச்சமுற்றே! 87

அச்சம் தொலையும் அமைதி பெருகும் அகந்தையதும்
மிச்சமி லாது விலகும், எதிர்க்கும் வினைகளையே
துச்சம் எனவே ஒதுக்கித் தொடரும் துணிவுவரும்
உச்ச நலமே தருவாள் உளமும் உவந்திடவே!! 88

உவந்து மகிழ்ந்தே உரைத்திடும் மந்திர உச்சரிப்பும்
சிவந்த மலர் கொடு செய்திடும் பூசைச் சிரத்தைகளும்
குவிந்த ஒருமுகக் கொள்கையும், தீமை கொளு முணர்வு
தவிர்ந்த நிலையும் தழைத்திட நல்ல தனம்வருமே! 89

தனந்தரும் ஞானம் தரும்பெரும் சாந்தம் தவழுகிற
மனந்தரும் தேக வலிமை தரும்நெஞ்சம் மாறுபடா
இனந்தரும், வெற்றிகள் ஏதும் தடையே இலாதபடி
தினந்தரும் கார்குழல் வாராகி தேவி திருக்கண்களே! 90

கண்ணுக் கினியது காட்சிகள் காணுதல், கானமிசை
பண்ணுக் கினியது பாடல்கள் பாடுதல், பாங்குடைய
மண்ணுக் கினியது மாசறு வாசனை, வாழ்வுயர்த்தும்
எண்ணுக் கினியது வாராகி மந்திரம் எண்ணுவதே! 91

எண்ணம் சிறப்ப தெழில்சுவை சிந்தையில், ஏற்றயிசை
வண்ணம் சிறப்பது சந்தக் குழிப்பினில், வாட்டுகிற
உண்ணம் சிறப்பது கொல்குளிர் தன்னில், உயர்ந்தமனக்
கிண்ணம் சிறப்பது வாராகி நல்லருட் கேணியிலே! 92

கேணி அமுதத்தைக் கிண்ணம் நிரப்பிடக் கேண்மையுடன்
ஆணி அடித்த அசையா உறுதி அவசியமே
தோணி எனவே கடலைக் கடக்கத் துணையிருப்பாள்
பேணி வணங்கப் பெரிதும் மகிழ்வள் பெரியவளே! 93

பெரியவள், அன்னை, பெரிய இடம்வசி பேறுடையாள்
அரியவள், அன்பின் அரசி , கொடுமை அடக்கிடவே
உரியவள். கோபம் உடையவள், உண்மை உணர்ந்துநலம்
புரிபவள், அன்பர் புனித மனங்கண்டு பூரிப்பளே! 94

பூபுரம் வாழ்பவள், பூரணி, பச்சை புனைகிறவள்
ஸ்ரீபுரம் எங்கும் திரிதருதேவி திருவடிசேர்
நூபுரம் கூடப் படையாய்ப் புடைத்து நொறுக்கிடுமே
கோபுரம் ஏறிக் குரல்கொடுப் போமவள் கொற்றங்களே! 95

கொற்ற மலாதொரு கோலம் அறியாக் கொலுவரசி
சுற்றங்க ளாகச் சுடரும் அறுவர் துணையிருக்கச்
சற்றும் தளராத தைரியம் நல்கும் தயவுடையாள்
அற்றங்கள் மூன்றும் அழித்தருள் செய்வாள் அரவணைத்தே!96

(அற்றங்கள் மூன்று - 1 தன்னால் அதாவது காய்ச்சல், தலைவலி போன்ற நோவுகள், பிறரால் அதாவது பாம்புக்கடி, போன்றவை, 3 இறையால் அதாவது புயல், தீ, போன்றவற்றால் வரும் இன்னல்கள்)

அணைபோட ஒண்ணாத ஆசைகள் பற்றி அலைக்கழிக்க
மணைபோட் டமர்ந்து வழிகாண லின்றி வருந்துகையில்
புணையாக வந்து பொழுதேறும் முன்னே புரந்திடுவாள்
இண வேறி லாத எமையாளும் தெய்வம் எதிரிருந்தே! 97

எதிராய் இருப்பாள் இனிய வருக்கும் இழிந்தவர்க்கும்
புதிராய் இருப்பாள் புகல அரியள்:, புகலடைந்தால்
கதியாய் இருப்பாள் கரத்தைப் பிடித்தே கனிவுசெய்வாள்
மதியாய் இருப்பாள் வழக்கில் வலிவுடன் வாதிடவே! 98

(எதிராய்- இனியவர்க்கு எதிரே இருந்து காப்பாள் இழிந்தவர்கட்கு எதிராக இருந்து அழிப்பாள்)

வாது புரிந்து வதைபடல் ஏனெமன் வாசல்வரும்
போது , வணங்கிப் புகழ்ந்தருள் வாராகி போற்றிசொலித்
தீது புரியா தினிய வகையில் தெளிவுதந்தே
ஏதம் இலதாய் விடுவன் நம்தேவி இடம்கொணர்ந்தே! 99

இடம்பிடித் தாளே எழில்கரிக் காவில் இதமுடனே
தடம்பதித் தாளகி லாண்டேஸ் வரியாய்த் தயவுடையாள்,
திடம்பதித் தேயவள் சேர்பதி சென்று ஜெபிக்கையிலே
உடம்பெடுப் பென்ப தொருபோ துமிலை உலகினிலே! 100
(திருவானைக்காஅகிலண்டேஸ்வரிவாராகியின்அம்சம்என்று சொல்லப்படுகிறது.)

# நூற்பயநன்

வாராகி அந்தாதி வாழ்த்தி மனத் திருத்திப்
பாரா யணம்செய்து பாடினால்- சீராக
எல்லாம் நடக்கும் இனிமையெலாம் சேரும்
வல்லாங்கு வாழும் வகை.



# வாராகி திருத்தசாங்கம்.

**காப்பு**

வாராகி அம்மை வளர்திருத்த சாங்கமிது
சீராய் அமைந்து சிறந்திடவே- நேராக
நின்னருளை நல்கிடுக நேசக் கணபதியே
கன்னல்பா வுக்குநீ காப்பு.

**நூல்**

***1 பெயர்***
பச்சைப் பசுங்கிளியே, பார்த்துப் பழந்தின்னும்
மெச்சுபுகழ்ப் புள்ளழகே, வீரமுடன்- இச்சகத்தை
எச்சரிக்கை யாய்க்காக்கும் எம்தேவி பேரென்ன?
உச்சரிப்பாய் வாராகி யே!

***2 நாடு***
வட்டமாய் ஆரம் வளைந்த கழுத்துடையாய்
மட்டில்லா நம்முடைய வாராகி - இட்டமுடன்
வாழுகிற நாடெதுவோ, வாயுரைப்பாய் பைங்கிளியே,
சூழுமிவ் வண்டமெனச் சொல்.

***3 ஊர்-***
பூங்காவில் வாழும் புதுக்கிளியே, எம்மன்னை
பாங்காய் அமரும் பதியெதுவோ?- நீங்காத
பத்தி மனங்கொள்ளும் பக்தர்கள் உள்ளங்கள்
சக்திவா ராகியின் ஊர்

***4 நதி***
மரகதப் பச்சையாம் வண்ணமெழில் கொண்ட
தரமுடைய கிள்ளாய்நீ சாற்று - வரமருளும்
வாகான வாராகி மாண்பு நதியெதுவோ
ஆகாச கங்கை அறி

***5 மலை***

அஞ்சுகமே, பேசும் அழகே,எம் வாராகி
விஞ்சும் மலையை விளம்புகநீ- நெஞ்சம்
கலையாத வெற்றியே கையகத் தாக்கும்
மலையாத வீர மலை.

***6 தேர்***

செம்மை அலகுடைய தேன்மொழியே, வாராகி
அம்மை ரதமெதுசொல் ஆய்ந்தேநீ - வெம்மைமிகு
போர்க்களத் தேபகைவர் புன்மனத்தில் அச்சத்தைச்
சேர்க்கும் கிரிசக்ரத் தேர்.

***7 வாகனம்***

பேசும்பொற் சித்திரமே பீடு மிகுந்திருக்கும்
ஆசைப் பசுங்கிளியே, அம்மையும் - நேசமாய்
ஏறுகின்ற வாகனம் ஏதுரைப்பாய்- மேதியெனக்
கூறும் எருமையெனக் கொள்.

***8 படை***

கிஞ்சுகமே, கொஞ்சுகிற கிள்ளையே, மாற்றாரை
அஞ்சவைக்கும் அன்னை படையெதுவோ- விஞ்சிக்
கலக்குகிற வாராகி கைப்படையே நீண்ட
உலக்கைப் படையென் றுரை.

**9 தார்**

பஞ்சுச் சிறகினிலே பச்சை இழைகிளியே
விஞ்சைமிகும் வாராகி தாருரைப்பாய் - மஞ்சள்
இழைத்த பசுவண்ணம் ஏறிவறி மாறு
தழைக்கும் எழில்மஞ்சள் தார்

***10 கொடி***

அன்னைநம் வாராகி யாதுகொடி வைத்துள்ளாள்
சின்னஞ் சிறுகிளியே செப்புவாய் - என்றைக்கும்
ஆசிதரும் ஏற்றமுள அம்மை திருத்தேரின்
வாசியாம் வெற்றிக் கொடி.

**நூற்பயன்**

இந்தத் திருத்தசாங் கத்தை மனம்கொண்டு
வந்தித்துப் போற்றி வணங்கிடுவோர்- சந்ததமும்
அன்னை அருளால் அகமகிழ வாழ்ந்திடுவார்
உன்னதமாய் வாழ்வார் உயர்ந்து.



# வாராகி நவரத்ன மாலை

**காப்பு**

ஒளிர் வயிரம் நல்முத்து மாணிக்கம், மரகத மோடுயர்ந்த நீலம்
பளபளக்கும் வைடூர்யம் கோமேத கம்புட்ப ராகமொடு பவளம் எல்லாம்
தெளிவுமிக வாராகி நவரத்ன மாலையெனத் தீட்டு தற்கே
களிமிகுந்த கற்பகப்பூங் கணபதியே நீவந்து காப்பா வாயே!

**வைரம்**

தேறும் திடம் சேரும்கதிர் வைரத்தொளிர் தேகம்
மீறும்திறல் மேலேயெழும் கால்கள்விரை வேகம்
சீறும்சினம் கொண்டேயெமைச் சீறாதருள் வாயே
கூறும்புகழ்ச் சேனாபதி வாராகியெம் தாயே! 1

**முத்து**

முத்தேறிய சோதிக்கிட மாகும்வளை பற்கள்
சத்தேறிய நேர்த்திக்கிட மாகுமொளிக் கற்கள்
மத்தேறிய வாழ்க்கையிதில் மேன்மையருள் வாயே
கெத்தேறிய சேனாபதி வாராகியெம் தாயே! 2

**பவளம்**

அம்மாயெழில் தேகந்தனில் ஆரம்திகழ் பவளம்
இம்மாநிலம் மீதுண்கிறேன் நீநல்கிடு கவளம்
எம்மாலினி ஏதுள்ளது? யாவும்தரு வாயே
செம்மாந்திடும் சேனாபதி வாராகியெம் தாயே! 3

**நீலம்**

உன்மாமகு டம்தான்தொடும் வானில்விரி நீலம்
என்னேநினைந் துள்ளாய்எனைத் தாங்கியளி சீலம்
முன்னேநினைக் கின்றேன்தெளி ஞானம்தரு வாயே
பென்னம்பெரு சேனாபதி வாராகியெம் தாயே! 4

**மரகதம்**

அருளே மர கதமேயொளிர் திருமேனியில் உடையாய்
பொருபோரிடைப் புடைமோதிடும் பெருந்தேவியர் படையாய்
வருநாளெலாம் வளநாளென நிறையத்தரு வாயே
ஒருமாதனிச் சேனாபதி வாராகியெம் தாயே! 5

**மாணிக்கம்**

மாணிக்கமே போல்செம்மையைக் காட்டும்சினக் கண்கள்
காணிக்கையாய் யான்நல்குவேன் என்பாவுள பண்கள்
நாணிச்செலும் என்வாழ்க்கையில் ஞானம்தரு வாயே
ஆணித்தரச் சேனாபதி வாராகியெம் தாயே! 6

**கோமேதகம்**

தேன்போலொளிர் கோமேதகம் வேய்ந்தேயொளிர் ஆரம்
தான்சூடிய வாராகியுன் ஆதாரமே சாரம்
ஏன்வந்தனை என்னாமலே நீயேயருள் வாயே
வான்போற்றிடும் சேனாபதி வாராகியெம் தாயே! 7

**புட்பராகம்(பூராகம்)**

பாராகமும் தேர்ந்தேனிலை பாண்டித்யமும் இல்லை
தாராளமாய் நீதந்திடில் வேறேயிலை தொல்லை
பூராகமே பூண்டோயருள் ஓங்கத்தரு வாயே
போராடிடும் சேனாபதி வாராகி யெம்தாயே! 8

**வைடூரியம்**

வன்மைப்புலிக் கண்போலொளிர் வைடூரியம் பூண்டோய்
புன்மைக்கெதிர் போராடவே கையாயுதம் ஆண்டோய்
அன்புக்கெதிர் அன்பைத்தரும் அம்மாவருள் வாயே
தன்னேரிலாச் சேனாபதி வாராகியெம் தாயே! 9

**நூற்பயன்**

வாராகியின் புகழ்பாடிடும் நவரத்தின மாலை
யாராகிலும் கவனத்துடன் மனம்கொண்டிடும் காலை
சேராதநல் வளம்யாவையும் சேர்ந்தேவரும் உண்மை
தீராப்பிணி தீர்ந்தேவிடும் தேகம்பெறும் திண்மை!

# மகாவாராகி ஊஞ்சல் பதிகம்

ஆடுகிற ஊஞ்சலிது , அழகான ஊஞ்சல்
அம்மைமகா வாராகி ஆடுகிற ஊஞ்சல்
தேடிவந்து தேவரெலாம் தெரிசிக்கும் ஊஞ்சல்
சிறப்பாகச் சூலினிகள் பிடிசுற்றும் ஊஞ்சல்
பாடிவரும் கின்னரர்கள் கிம்புருடர் தாமும்
பக்கத்தில் நின்றறிய பண்பாடும் ஊஞ்சல்
காடுமலை தாம்கடந்தே ஏகிவரும் ஊஞ்சல்
கன்னியர்கள் மற்றறுவர் களித்தாட்டும் ஊஞ்சல்1

(வாராகி ஏழு கன்னியர்களில் ஒருத்தி. எனவே மற்றறுவர் எனப் போட்டேன். **சப்தகன்னியர்** எனப்படுவோர் பிராம்மி, மகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி, சாமுண்டீஸ்வரி)

அன்னை லலிதாம்பிகையாள் யாருமறியாமல்
அழகாகப் பின்நின்றே ஆட்டுகின்ற ஊஞ்சல்
மின்னலிடப் போரிட்ட களைப்பெல்லாம் தீர
வேண்டிவந்தே யோகினிகள் விரைந்தாட்டும் ஊஞ்சல்
கன்னலெனும் குரலெடுத்து மகாஷ்யாமளாவும்
கையெடுத்த வீணையுடன் பாப்பாடும் ஊஞ்சல்
சின்னவள் நான் எனச்சொல்லி வாராகி பக்கம்”
ஸ்ரீபாலாதேவி வந்தே அமர்ந்துகொளும் ஊஞ்சல்2

(போரிட்டுக் களைத்து வந்தவளை அன்னை லலிதாவின் ஏற்பாட்டில் ஊஞ்சலிலேற்றி ஆட்டுகிறார்கள். குழந்தைகள் ஊஞ்சலில் ஏறிக்கொள்வது வழக்கம். பாலா திரிபுரசுந்தரி, 9 வயதுக்கன்னி. ஊஞ்சலில் ஏறியமர்ந்து கொள்கிறாள். மஹாசியாமளா கையில்

வீணையுடன் திகழ்பவள். அவள் தான் மீனாக்ஷி அவள் தான் மாதங்கி. மந்த்ரிணி)

எப்பொழுதும் தயாராக இருக்கின்ற மகிஷம்
எதிர் நின்றே வாராகி முகம்பார்க்கும் ஊஞ்சல்
அப்பொழுதங் கோபாங்கப் பிரத்யங்க ரெல்லாம்
அம்மைக்குக் கைங்கர்யம் ஆற்றுகின்ற ஊஞ்சல்
ஒப்பரிய ளாம்தண்ட நாதாவின் தேராம்
ஓங்குபுகழ் கிரிசக்ரம் உலவுகிற ஊஞ்சல்
முப்புரங்கள் எரித்தவனும் முன்வந்து நின்றே
முறையாக ஆசிகளை வழங்குகின்ற ஊஞ்சல் 3

(வாராகியின் வாகனங்களில் ஒன்று மகிஷம். வாராகியின் அங்க உபாங்க ப்ரத்யங்க தேவதைகள் கைங்கர்யம் செய்கிறார்கள். . கிரிசக்ரம் - வாராகியின் தேரின் பெயர்)

தன்னுடைய அம்சமெனத் திருமாலும் பூமி
தாங்கியதைச் சொல்லிமனம் மகிழுகின்ற ஊஞ்சல்
பொன்னவிரும் ஸ்ரீ புரத்தில் ஆடுகிற ஊஞ்சல்
புரவியிலே ஏறுபவள் போற்றுகிற ஊஞ்சல்
கொன்றிடுவேன் என வந்த விசுக்கிரனை மாய்த்தே
குவலயத்தைக் காத்திட்ட வாராகி ஊஞ்சல்
மன்னுபுகழ் வாக்தேவி எண்மரங்கே வந்து
வளர் வரிசை பாடுகிற வாகான ஊஞ்சல் 4

புரவியிலே ஏறுபவள்- அஸ்வாரூடா. ஸ்ரீ லலிதாவின் ஏற்பாடாகையில் ஸ்ரீ புரத்தில் நடக்கிறது. லலிதோ பாக்யானத்தில் வாராகியால் கொல்லப்பட்டவன் விஷங்கன் எனச் சொல்லப்படுகிறது. ஆனால் தேவி மகாத்மியம் அவன் பேர் விசுக்கிரன் என்கிறது வாக்தேவிகள். வஸினி, காமேஸ்வரி,

மோதினி ,விமலா, அருணா, , ஜயினி சர்வேஸ்வரி, கௌலினி. )

**கேசாதிபாதம்**

கரண்டகமாம் கிரீடமுளோய் ஆடாயோ ஊஞ்சல்
கருமேகக் குழலுடையோய் ஆடாயோ ஊஞ்சல்
கருணை விழிகொண்டவளே ஆடாயோ ஊஞ்சல
கலையேன முகமுடையோய் ஆடாயோ ஊஞ்சல்
உருண்ட திருத் தோளுடையோய் ஆடாயோ ஊஞ்சல்
ஒளியணிகள் பூண்டவளே ஆடாயோ ஊஞ்சல்
பெருந்தனங்கள் கொண்டவளே ஆடாயோ ஊஞ்சல்,
பேருலக வயிறுடையாய் ஆடாயோ ஊஞ்சல் 5

(கரண்டகம்- பூக்கூடை போல கவிழ்க்கப்பட் அமைப்பு
ஏனமுகம் - வராகமுகம்)

**ஆயுதங்கள்**

சக்கரத்தைத் தரித்தவளே ஆடாயோ ஊஞ்சல்
தளர்வறியாக் கதையுடையாய் ஆடாயோ ஊஞ்சல்
மிக்கவரும் வாளுடையாய் ஆடாயோ ஊஞ்சல்
வில்லம்பு கொண்டவளே ஆடாயோ ஊஞ்சல்
தக்கநெடும் உலக்கையினாய் ஆடாயோ ஊஞ்சல்
தனிக்கலப்பை கொண்டவளே ஆடாயோ ஊஞ்சல்
பக்கமதில் சூலமுளோய் ஆடாயோ ஊஞ்சல்
பங்கயம்சங் குடையவளே ஆடாயோ ஊஞ்சல் 6

வாராகியின் ஆயுதங்கள்-சங்கு, சக்கரம், தாமரை, கதைவில் அம்பு, உலக்கை, கலப்பை, வாள், திரிசூலம்

சுழியியக்க நாபியினாய் ஆடாயோ ஊஞ்சல்
சுந்தரமாய் இடையுடையோய் ஆடாயோ ஊஞ்சல்
கழிதிறல் கொள் தொடையழகே ஆடாயோ ஊஞ்சல்
கால்களிலே வேகமுளோய் ஆடாயோ ஊஞ்சல்

பழிதவிர்க்கும் திருவடியாய் ஆடாயோ ஊஞ்சல்
படைநடத்தும் பாதமுளாய் ஆடாயோ ஊஞ்சல்
வழி கொடுக்கும் வாராகி ஆடாயோ ஊஞ்சல்
வணங்குகிறோம் திருவடியே ஆடாயோ ஊஞ்சல் 7

வார்த்தாளி வாராகி ஆடாயோ ஊஞ்சல்
வராகமுகி வராகமுகி ஆடாயோ ஊஞ்சல்
நேர்த்தியந்தே அந்தினியே ஆடாயோ ஊஞ்சல்
நெறிருந்தே ருந்தினியே ஆடாயோ ஊஞ்சல்
சீர்ஜம்பே ஜம்பினியே ஆடாயோ ஊஞ்சல்
திகழ்மோஹே மோஹினியே ஆடாயோ ஊஞ்சல்
நேர்ஸ்தம்பே ஸ்தம்பினியே ஆடாயோ ஊஞ்சல்
நெறிகாட்டி ஈர்ப்பவளே ஆடாயோ ஊஞ்சல். 8

**பன்னிருபெயர்கள்**

பஞ்சமியே தண்டநாதா ஆடாயோ ஊஞ்சல்
பரிவுசிவா சங்க்யேதா ஆடாயோ ஊஞ்சல்
மஞ்சுசம யேஸ்வரியே ஆடாயோ ஊஞ்சல்
மனமுறையும் அரிக்கினியே ஆடாயோ ஊஞ்சல்
அஞ்சொல்மகா சேனாவே ஆடாயோ ஊஞ்சல்
ஆக்ஞாசக் ரேஸ்வரியே ஆடாயோ ஊஞ்சல்
பஞ்சியொளிர் போத்ரினியே ஆடாயோ ஊஞ்சல்
பல்சமய சங்யேதா ஆடாயோ ஊஞ்சல் 9

வழக்குகளை வெல்லவைப்பாய் ஆடாயோ ஊஞ்சல்
வாராகி வார்த்தாளி ஆடாயோ ஊஞ்சல்
சழக்குகளை வேரறுப்பாய் ஆடாயோ ஊஞ்சல்
தனிக்கனவில் வந்திடுவாய் ஆடாயோ ஊஞ்சல்

அழைப்புகட்குச் செவிசாய்ப்பாய் ஆடாயோ ஊஞ்சல்
ஆக்கங்கள் நல்கிடுவாய் ஆடாயோ ஊஞ்சல்
இழைத்துநலம் அருளிடுவாய் ஆடாயோ ஊஞ்சல
எங்கள்மகா வாராகி ஆடாயோ ஊஞ்சல்

10



# வாராகி கோலாட்டம்

கோலாட்டமாம் கோலாட்டம்
குதித்தடிக்கும் கோலாட்டம்
நாலாபக்கம் சுற்றியே
நாமடிக்கும் கோலாட்டம் - கோலாட்டமாம்
*
வாராகி கோலாட்டம்
வட்டமிடும் கோலாட்டம்
சீராட்டிப் பாடியே
திரிந்தடிக்கும் கோலாட்டம் - கோலாட்டமாம்

கைமாற்றி அடியுங்கடி
கால்தூக்கி அடியுங்கடி
தையாதையா என்றாடியே
தாளம் போட்டே அடியுங்கடி - கோலாட்டமாம்

வார்த்தாளி பேர்பாடி
வளைந்து வளைந்து அடியுங்கடி
நேர்த்தியாக அடியுங்கடி
நிற்காம அடியுங்கடி - கோலாட்டமாம்

தண்டநாதா பேர்பாடி
தத்தித்தத்தி அடியுங்கடி
பெண்டுகளா அடியுங்கடி
பிரிந்து கூடி அடியுங்கடி -- கோலாட்டமாம்

எருமை ஏறி வருபவளை
ஏத்திப் பாடி அடியுங்கடி
விரைந்து விரைந்து அடியுங்கடி
மேல் கைதூக்கி அடியுங்கடி - கோலாட்டமாம்

குதிரை மேலே வருபவளைக்
குதித்துப் பாடி அடியுங்கடி
சதிராடி அடியுங்கடி
சந்தோஷமா அடியுங்கடி - கோலாட்டமாம்

பன்றிமுகம் கொண்டவளைப்
பாடிப்பாடி அடியுங்கடி
ஒன்று விட்டே ஒன்றுதாவி
உற்சாகமாய் அடியுங்கடி - கோலாட்டமாம்
*
வேகவேக வேகமாக மேலும் கீழும் கோல்கள் தட்டி
ஏகமாக முன்னே சென்று வேகமாகப் பின்னேவந்து
நாகம் போலே கீழ்படிந்து நன்கு தேகம்தான் நெளிய
ஆகும் நலம் வேண்டி வேண்டி அடியுங்கடி கோலாட்டம்
- கோலாட்டமாம்
*
கைவளையல் சத்தமிட
கால்பாதம் தாளமிட
தை தை தை தை தையெனவே
தாளகதி ஓங்கிவர
*
அடியுங்கடி அடியுங்கடி அடியுங்கடி கோலாட்டம்
அம்மையவள் வாராகி கோலாட்டம் அடியுங்கடி
துடிப்புடனே அடியுங்கடி துள்ளித் துள்ளி அடியுங்கடி
சுத்திச் சுத்தி அடியுங்கடி தோள்நி மிர்ந்து அடியுங்கடி -
கோலாட்டமாம்

---

# வாராகி தெம்மாங்கு

கருக்கிருட்டு நேரத்திலே
கால்நடையாய்ப் போறோமே
திருடர்கள் வந்துவிட்டா
திண்டாடிப் போவோமே!

திருடர்கள் வந்துப்புட்டா
தேவி நம்ம வாராகி
கருக்கிருட்டு நேரத்திலும்
காப்பா கலங்காதே!

தீரா நெடுந் தொலைவு
செல்லுறோமே ஏமச்சான்
யாரே துணைவருவா
அல்லாடிப் போவேனே!
அல்லாட வேண்டாண்டி
அச்சங்கொள்ள வேண்டாண்டி
சொல்லாம நம்கூடத்
துணைவருவா வாராகி

உச்சிவெயில் நேரத்திலே
ஊருவிட்டுப் போறேனே
எச்சரிக்கை யாக நம்மை
எவர்காப்பார் ஏமச்சான்

எச்சரிக்கை யாக நம்மை
எவர்காப்பார் என்பவளே
கச்சைகட்டி வாராகி
காப்பா கலங்காதே!

## வாரிக் கொடுப்பாள் வாராகி 54

நட்டநிசி நேரத்திலே
    நான்பயந்து போவேனே
எட்டிவரும் பேய்பூதம்
    என்னசெய்யப் போகிறதோ?

காத்துக் கருப்புகளும்
    காட்டேரி பூதங்களும்
ஆத்தாநம் வாராகி
    அருகில்வர ஓடிவிடும்

அருகில் வருவாளோ
    ஆடுபலி நாந்தரலே
பெரிசாகப் பூசைகளும்
    பிச்சிநான் செய்யவில்லே!

நெஞ்சாங் குழிக்குள்ளே
    நீயவளை வச்சுவிடு
அஞ்சாமக் காத்திடுவா
    அம்மை நம்ம வாராகி

நல்லவார்த்தை சொல்லிப்பிட்ட
    நம்பிக்கை கொடுத்துப்பிட்ட
செல்லாயி வாராகி
    தெய்வத்தைக் கும்பிடுவோம்

12-5-2018

# வாராகி கும்மி

கும்மியடி பெண்ணே கும்மியடி - மிகக்
கோலா கலமாகக் கும்மியடி
நம்மரும் வாராகி தேவியின் பேர்பாடி
நல்ல படியிங்கே கும்மியடி -
கும்மியடி

வானைத் தடவிடும் அம்மை கிரீடத்தில்
வண்ண ஒளிவைரம் பாருங்கடி
தானைத் தலைவியின் வீரத்தைப் பாடியே
தட்டித் தட்டிக் கைகள் சேருங்கடி -
கும்மியடி

காலை எடுத்துத் தரையில் வைத்தால் -இந்தக்
காசினி முற்றும் அதிருமடி
சாலப் புடைத்தே எதிரியை வீழ்த்திடும்
சத்தத்தில் விண்மீன் உதிருமடி -
கும்மியடி

தன்னை வணங்கிடும் பக்தரைக் காத்திடத்
தாயெனப் பாசம் பொழிபவளாம்
அன்பர்கள் சிக்கும் வழக்குகளில் வேண்டும்"
ஆதாரச் சொற்கள் மொழிபவளாம் -
கும்மியடி

என்ன கொடுப்பத வளறிவாள் அதை
என்று கொடுப்பத வளறிவாள்
அன்னதை எவ்விதம் எங்குக் கொடுப்பதென்(று)
அத்தனையும் அவள் தானறிவாள் -
கும்மியடி

# வாராகி காவடிச் சிந்து

அம்மா அருளே வாராகி - நீ
ஆனந்த அன்புப்ரவாகி- மிக
அருளே தரும் உயர்வானவள் அகமேவொளிர்
அருளானவள்
அற்புத வஜ்ஜிர தேகி - நினை
அண்டினோம் அன்புள ராகி

ஓங்கும் மணித்வீப வாசி - அம்மா
உன்னத மாமக ராசி -நீ
ஒளிமிக்கவள், அளிமிக்கவள், உரமிக்கவள்,
திறல்மிக்கவள்
உத்தமத் தேகப்ர காசி- அம்மா
உன்னிடம் வேண்டினோம் ஆசி

ஓர்கையில் உள்ள துலக்கை- அதை
ஓச்சினால் வீழ்த்து மிலக்கை- நீ
உலகேழையும் புரக்கின்றவள் உறுபோரினில்
பறக்கின்றவள்
உத்தமத் தேரில் இருக்கை - உன்கை
உற்றோர்க் கருளும் அறக்கை

புத்தி துலக்கிடும் தேவி - அம்மா
போற்றினோம் உன்பெயர் கூவி -உன்னைப்
புகழாதவர் உணராதவர் அகலாதவர் புகழானவர்.
பூத்திடும் தூமலர் தூவி - உன்றன்
பொன்னடி வீழ்கிறோம் மேவி

உன்னிடம் தந்தனன் பாரம் - இனி
உன்றனின் சித்தப்ர காரம் - அம்மா
உயர்ஞானமே வரவாகவே ஒருவார்த்தை நீ உரைசெய்தருள்
ஒவ்வோர் கணமும் உன்நேரம் - இதோ
உன்றனுக் கென்றன் பா ஆரம்



# வாராகி கீர்த்தனை

## நெஞ்சில் தெளிவுகளை நீ தருவாயா?

**பல்லவி**

புதுப் புதுக் கேள்விகள் எழுகின்றன–அம்மா
புதிராய் அவை மனம் விழுகின்றன தாயே

அனுபல்லவி

இதுவோ அதுவோ இதுவதுவோ இல்லை
எதுவோ அதுவெனக் குழப்பிக் குழப்பியெனைப்–
புதுபுதுக்

சரணம்
கனவிலே வந்துநீ விடைதருவாய் எனக்
கற்றவர் உற்றவர் காதிலே சொன்னார்
நினைவிலே சுமந்தனன் வந்துவிட்டேன் இனி
நின்பரம், நின்வயம் நினைச் சரணடைந்தேன் -
புதுப்புதுக்

வார்த்தாளிநீ வாராகி தாயே
வள்ளல்நீ வண்மையே நீ வருவாயா?
நேர்த்திநீ, நெறிகள்நீ, நேசம்நீ தாயே
நெஞ்சில் தெளிவுகளை நீ தருவாயா? புதுப்புதுக்

# வாராகி அட்டமங்கலம்

96 வகைப் பிரபந்தங்களுள் அட்ட மங்கலம் என்பது ஒன்று. அஷ்டகம் போலத்தான் என்றாலும் பாடப்படும் தெய்வத்தைத் தன்னைக் காக்கவேண்டும் என்று ஒவ்வொரு பாடல் முடிவிலும் வேண்டுவதாக அமைய வேண்டும். இயன்ற வரை உடன்பாடாக அமையவேண்டும். ஒன்று முதல் எட்டு எண்களுக்குறிய சொற்கள் முறையே ஒவ்வொரு பாடலிலும் அமைவதுசிறப்பு.

## வாராகி அட்டமங்கலம்

ஒன்றென்று நெஞ்சத்தில் எண்ணி எண்ணி
        உறுதியுடன் பக்திசெயும் உள்ளத்தோர்க்கு
நன்றென்று தானருளும் பரிவுத் தேவி
        நாவுக்குப் பயிற்சிதந்தே வார்த்தை யள்ளி
வென்றென்றும் வாழ்கவென வாழ்த்தும் அன்னை
        வேண்டுவதை நலங்கண்டே வழங்கு கின்றாள்
என்றென்றும் எங்கெங்கும் எம்மைக் காக்க
        எச்செயலும் வென்றிடவே செய்து காக்க!

இரண்டில்லை ஒன்றேதான் என்பார், இல்லை
        இரண்டடுத்த ஒன்றென்பார், இல்லை இல்லை
இரண்டேதான் வெவ்வேறாய் உள்ள தென்பார்
        எமக்கெதுவும் விளங்கவில்லை,, குழம்பி இங்கே
மிரண்டுள்ளேன், ஒன்றேயாய் ஒன்றுக் குள்ளே
        வெவ்வேறாய் விளங்குகிற வாரா கித்தாய்
சென்றோடும் வாழ்க்கையிலே புகழைக் கொண்டு
        சேர்த்தென்னை நன்றாகக் காக்க காக்க!

முப்போதும் தொழச்சொல்வார், இல்லை, இல்லை
` முன்னிரவில் தொழுவென்பார், விந்தை விந்தை
எப்போதும் நெஞ்சத்தில் இருந்து கொண்டே
எழுதுகநீ என்றென்னை இயக்கு கின்றாள்
தப்பேதும் செய்யாமல் தவறும் போதே
தண்டனையைத் தாங்குவகை தந்து காப்பாள்
அப்போதைக் கப்போது வாராகித் தாய்
அவ்வுலவிற் கிவ்வுலகை அருளிக் காக்க!

நாற்புறமும் பச்சையெனத் திகழு கின்ற
நாயகியாள், ஞாலத்தில், கடலா ழத்தில்
மேற்புறத்தில் கீழ்ப்புறத்தில் எங்கெங் கேயும
வீறுகொளும் வாராகி, அடியார் வாழ
ஏற்புடைய நல்குகிற தேவி, சொற்கள்
ஏற்றமுடன் அருளுபவள், நாமம் தன்னைப்
போற்றுகிறேன், எனையறியும் ஞானம் தன்னைப்
புத்தொளியாய்த் தந்தென்னைக் காக்க காக்க!

பஞ்சமியாள், பராபரையாள், பரிவு மிக்காள்
பார்வையொரு சிறிதளவும் பட்டால் போதும்
விஞ்சுபுகழ் தேடிவரும், வேண்டிச் சென்று
வேட்கையுடன் தகுதியிலார் தம்மை அண்டிக்
கெஞ்சுகின்ற நிலையின்றி விருதெல் லாமும்
கேண்மையுடன் கூடிவரும், வெற்றி கிட்டும்.
தஞ்சமென அவள்பாதம் பணிந்து விட்டேன்
தக்கவெலாம் தந்தெம்மைக் காக்க காக்க!

ஆறெதுவோ எனக்குழம்பி, வலிமை குன்றி
அல்லாடும் போதினிலே,குழப்பம் தீர்த்து
வீறுகொளும் மார்க்கத்தை தெரியக் காட்டி
விடிவுக்கு வழிவகுக்கும் வாரா கித்தாய்
சீறுகிற சினமுடையாள் என்ற போதும்
சினம் மறந்தே அடியார்க்குத் தாகப் போதில்
சாறெடுத்துத் தருகிறவள், அன்னை பாதம்
தலைவைத்தேன், நலமெல்லாம் தந்து காக்க!

எழுதிவைத்த படிதானே இயங்கும் என்றே
இடிவதுமேன்? எழுவரிலே ஒருத்தி தன்னைத்
தொழுகிறவர் விதிகொடுக்கும் ,சிரமப் பாட்டை
தொலைத்திடுவாள்,தணித்துவைப்பாள்,சிந்தை ஒன்றி
எழுதுகிற கவிதையிலே எழுதி ஈவாள்
எதிர்வாதம் செய்பவரை, மயங்க வைப்பாள்
வழிமறைப்பு நீங்கிவிடும், வாராகித் தாய்
வளமெல்லாம் என்றனுக்குத் தந்து காக்க!

இட்டவடி போதாதோ, அம்மா உன்னை
எட்டுவதும் எப்படியோ என்றே வேண்ட
எட்டடியும் பத்தடியும் தேவை யில்லை
எட்டியடி வைத்திடுமுன் சிந்தை தன்னில்
தொட்டுவிடின் போதுமெனச் சொல்லு கின்ற
சூக்குமத்தாள் வாராகி இதைப் படித்தே
எட்டியடி வைக்கின்ற அனைவ ருக்கும்
ஏற்றங்கள் அத்தனையும் தந்து காக்க!



# வாராகி நவமணி மாலை

நவமணி மாலை என்பது 96 பிரபந்தங்களில் ஒன்று. நவரத்ன மாலையிலிருந்து மாறுபட்டது. பா, பாவினங்களில் 9வகைகளைத் தேர்ந்தெடுத்து, காப்பைத்தவிர 9 பாடல்கள் எழுதவேண்டும்.

பாவே இனமே என்றிவை இரண்டு
மேவிய வகையது நவமணி மாலை என்பது விதி.

வாராகி நவமணி மாலை எழுதியிருக்கிறேன். வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா வஞ்சிப்பா அவற்றின் இனங்களில் ஒவ்வொன்று, ஆக மொத்தம் எட்டு. இவற்றோடு மருட்பாவையும் சேர்த்து ஒன்பது வகைகளாக எழுதியுள்ளேன்.

# வாராகி நவமணி மாலை

காப்பு

அம்மைமகா வாராகி ஆசிகளை வேண்டுகிற
செம்மை நவமணி மாலையிது - தும்பிக்கைக்
காரனே, அன்புக் கணபதியே, செய்யுமிக்
காரியத்தில் நீயேதான் காப்பு.

## நூல்

### வெண்பா

ஓங்குபுகழ் நாயகியாள், உத்தமி, வாராகி
ஆங்காரி, அன்பின் அருள்வாரி- தேங்கும்
அகந்தைக் கிழங்கை அடியோடு பேர்த்தே
இகம்செம்மை செய்வாள் இனிது. 1

### வெண்பா இனமாகிய வெளிவிருத்தம்

இனியவள், அருள்பவள், எழிலவள் பலமவள் - வாராகி
கனியவள், நிலமவள் புனலவள் காற்றவள் - வாராகி
கனலவள், வானவள் அணுவவள் கதியவள் - வாராகி
மனம்உனும் முனம்வரும் தயையவள் தாயவள்- வாராகி 2

ஆசிரியப்பா

வாராகி என்று வாய்சொன்னால் கூடத்
தாராள மாகத் தருகிற தேவி
கூரான தந்தம் கொடுமையை மாய்க்கும்
வேரோடு தோண்டித்தீ வினையை அழிக்கும்
ஏனோவென் றில்லாமல் இதமாய்ப் பணிந்தால்
தானாக வந்து தயைபுரி கின்றவள்
பாதம் பணிந்து பரவுக
வாதில் வெல்லாம் வழ்க்கையும் வெற்றியே! 3

ஆசிரிய விருத்தம்

வெற்றியெனச் சொல்வதெது? பிறரைவென்று நாமுயரும்
வித்தை தானா?
கற்றதனைக் கைக்கொண்டு காரியத்தைக் கச்சிதமாய்க்
கணித்தல் தானா?
பெற்றிருக்கும் நலமெல்லாம் வெற்றியினால்
பிறந்தனவா? பின்னர் என்ன?
பற்றியவள் பாதத்தைப் பலமெல்லாம் அவள்கொடுக்கப்
பார்த்தல் தானே! 4

கலிப்பா

தானாக எனக்கென்ன தகுதியுண்டு, தாயேநீ
தானாகத் தருவதுவே தனிப்பெரிய உன்னதமாம்
வானாக, மண்ணாக, வளியாகப் புனலாக
ஆனாத காற்றாக யாவையுமாய், யாவினுள்ளும்
ஊனாக உயிராக உள்ளவளே காத்தருள்க
நானாகச் செய்வதெல்லாம், நல்லடியைப் பற்றுவதே
பற்றாக முற்றாகப் பற்றுவது யாதெனிலோ
வற்றாத பேரருளாய் மாண்பருளும் வாராகி

**பொற்றா மரைப்பாதம் போய்ப்பற்றிக் கொள்வதுதான்
கற்காத போதினிலும் கல்விதரும் யாதெனிலோ
முற்காலம் தற்காலம் பிற்காலம் யாவுமெனப்
பற்றாகப் பற்றுதற்குப் பரிந்துவரும் திருவடியே!
வெற்றாகப் போகாமல் வீறுதரும் யாதெனிலோ
சற்றேனும் கூடாத சந்தேகம் இல்லாமல்
முற்றாகப் பற்றுகிற மூர்க்கமுள பக்தியதே!
எனவாங்கு,**

**நெஞ்சம் கனிந்து நினைவும் ஒன்றி
தஞ்சம் எனவே சரணம் அடைக
அஞ்சல் இல்லை, அபயம்
கஞ்சம் இன்றிக் கையகப் படுமே!** 5

**கலிப்பாவின் இனமாகிய
கட்டளைக் கலித்துறை**

**அகப்படும் யாவும் அகம்படும், நெஞ்சில் அவளிருக்கச்
சுகப்படும் யாவும் சுகம்படும், வேண்டும் சுவைகளெல்லாம்
மிகைப்பட லின்றி மிகப்படும், நல்கும் விடயமெல்லாம்
வகைப்படும் நல்ல வளப்படும் அன்னை வரத்தினிலே!** 6

**வஞ்சிப்பா**

**வரமருளுவள் வளமருளுவள்
தரமருளுவள் தகவருளுவள்
இனமருளுவள் இதமருளுவள்
மனத்தமைதியை மகிழ்ந்தருளுவள்
எனவே நீ
இடைவிடா தவள்பதம் எண்ணி
நடைபெறும் நாள்களை நகர்த்துக நலமே!** 7

**வஞ்சித்துறை**

**நலமே பெறுக**
**பலமே உறுக**
**நிலமே விளைக**
**கலைகள் மலிக! 8**

## மருட்பா

**(வெண்பாவில் தொடங்கி அகவலில் முடியும். இது வாயுறை வாழ்த்து. அதாவது , இத்தெய்வத்தைப் பணிந்து நீ வாழ்வாயாக என்று வாழ்த்துவது)**

**மலியும் வளமெல்லாம் வாராகி வந்து**
**நலமாய் மகிழ்வோடு நல்கிப் - பொலிக**
**பொலிகவென என்றும் புரந்திடுவாள், நெஞ்சில்**
**வலிமை அருள்வாள் வளங்கொடுப்பாள் என்பதனால்**
**நெஞ்சம் மறவா நிலையில்**
**தஞ்சம் அடைக , சந்ததம் ஓங்கவே! 9**

**29-9-2018**

# வாராகி தோடகம்

சங்கராச்சாரியாருடைய சீடர் தோடகாச்சாரியார் ஒரு அருமையான சந்தத்தில் தோடகாஷ்டகம் எழுதினார். அந்தச் சந்தத்திற்கே தோடகம் என்று பெயர் வந்தது. ஒரு அடிக்கு எட்டுப் புளிமாக்களால் ஆன கண்ணிகள்.

இதோ வாராகி தோடகம்

1 அருளே பொருளே அறிவே மறையே
அழகே அகமே அமைகின் றவளே
அரிதென் றெதுவும் உனதா யிலையே
திருவே னமுகி சரணம் சரணம்!

2 அறிவே னெனவே உரைசெய் வதெலாம்
சிறிதும் அறிவே இலைநான் அறிவேன்
வறியேன் வழிநீ எனவே நினைவேன்
திருவே னமுகி சரணம் சரணம்!!

3 எதுநான் செயினும் அதுவுன் செயலே
எனுமோர் மனமே தருவாய் இனிதே
கதிவே றிலையே மதிதா நிதிதா
திருவே னமுகி  சரணம் சரணம்!

4 கவியில் பொருளே தருவாய் வருவாய்
கருதக் கருதும்  கணமே வருவாய்
அவையில் உரையே அழகாய்ச் சொரிவாய்
திருவே னமுகி சரணம் சரணம்!

5 எளியேன் எனவே கருதி அரிதை
விலகப் புரிதல் அழகோ அழகோ
அளியால் அரிதை எளிதாக் கிடுநீ
திருவே னமுகி சரணம் சரணம்!

6 நெறியில் விலகி நினைவிட் டிடினும்
சரியில் வழியில் தடைபோட் டிடுவாய்
பொறியில் படினும் விடுவித் திடுவாய்
திருவே னமுகி சரணம் சரணம்!

7 பனியோ கனலோ வெயிலோ நிழலோ
முதலோ முடிவோ எதிலும் எதிலும்
நினைவே நினதாய் நிகழப் புரிவாய்
திருவே னமுகி சரணம் சரணம்!

8 எனதென் றுளவை உனதென் றறியும்
ஒருஞா னமதை உளமே தருவாய்
கனிவே, கருணைக் கடலே, நிறையே
திருவே னமுகி சரணம் சரணம்!

# வாராகி பள்ளு

ஓடிவரும் தேர்ச்சத்தம் காதில்கேட்குதே -அதன்
உள்ளமர்ந்த வாராகி பேரொலிக்குதே
கூடவரும் யோகினிகள் ஆட்டம் காண்குதே- எதோ
கொண்டாட்டம் போட்டுவரும் வேட்டு மீறுதே
பாடிவரும் தேவதைகள் நாதம் கேட்குதே - வரும்
பாதையெல்லாம் ஒளிவெள்ளம் பளபளக்குதே
நாடிவரும் படைதிரண்டே அணிவகுக்குதே-இது
நாடகமா நாட்டியமா, எனை மயக்குதே!

கோடையிடி போலொலியும் குலைநடுக்குதே- களம்
கூத்தாடும் பேய்க்கூட்டம் கெக்கலிக்குதே
சாடிவரும் எதிரியணி துடிதுடிக்குதே- கிரி
சக்கரத்தின் தோற்றமெங்கும் தடதடக்குதே
கூடுமலை மீதெகிறி ரதம் கடக்குதே - அதைக்
கொடியவர்கள் கூட்டம் கண்டு கிடுகிடுக்குதே!
பாடிவரும் பக்தர்களின் படை நடக்குதே - அன்னை
பரவசமாய் முறுவலிக்க அருள்கிடைக்குதே!

# வாராகி சம்வாதம்

வினா:

எங்க ளுக்குக் குறைகள் பலவும் உண்டே அம்மையே - இதுபோல்
ஏதும் உனக்கும் உண்டோ அன்னாய், எடுத்துச் சொல்கவே

வாராகி விடை:

பிறக்கும் போதே பெரிய ளாகப் பிறந்து விட்டேனே- அரும்
பிள்ளை விளை யாட்டி லாமல் இருந்து விட்டேனே

வினா:

பார்க்க நல்ல பொலிவாய்ப் பலரும் இருக்கும் போதிலே- நீயும்
பன்றி முகம் ஏனெ டுத்தாய் சொல்க அம்மையே!

வா.வி:

தோன்று தீமை ஆழ மாக ஊன்றி விட்டதால் - அதைத்
தோண்டி வீசத் தேவை இந்தப் பன்றித் தோற்றமே

வினா:

குடல்கிழிப்பாய் மது குடிப்பாய், என்று சொல்கிறார் - கேட்டால்
குலைநடுக்கம் ஆகுதம்மே என்ன சொல்கிறாய்"

வா.வி:
அதனைக் கேட்டு நீயும் ஏண்டா கவலை கொள்கிறாய் - நான்
ஆளுக் கேற்பச் செயலெடுப்பேன் அறிந்து கொள்ளடா
வாளை ஏந்தி வருபவர்முன் வாளெடுக்கிறேன் - மாறாய்
வாழைப்பழம் தருபவர்முன் தணிந்து போகிறேன்

வினா:

இறக்கும் பொழுதில் உன்னை நினைக்கும் எண்ணம்
வருதற்கே - அம்மா
எனக்கு நீயும் அந்தச் சமயம் உதவி செய்வையா?

வா.வி:

இந்தக் கணமே அந்தக் கணமாய் எண்ணிப் பழகிக்கொள் - ஆம்
அந்தக் கணத்தில் நினைத்த படியே எல்லாம் நடக்குமே!

வினா :

என்றனிடத்தில் நீயு மெதிர் பார்ப்ப தென்னேயோ- அதை
எடுத்துச் சொன்னால் அந்தப் படி இருக்கப் பார்க்கிறேன்

வா.வி:

உனக்குக் கொடுத்த பணியை நீயும் ஒழுங்காய்ச் செய்யடா-
சமயம்
உனக்குக் கிடைக்கும் போதில் என்னை நினைவில் வையடா!

# வாராகி கவசம்

**நதி கனல் பூமி வளி வெளித் தாக்கம்**
**நன்மை செய்யட்டும்**
**குதிகொளும் அச்சம் பிணி படு காமம்**
**கொட்டம் அடங்கட்டும்**
**எதையெதைக் கொண்டே எதையெதைச் செய்தால்**
**இவனுக் கனுகூலம்**
**அதையதைக் கொண்டே அதையதைக் காப்பாய்**
**அம்மா உன்கவசம்.**



# வாராகி இரட்டைமணிச் சிந்து

காப்பு

வாராகி இரட்டை மணிச்சிந்து
வாகாக நானும் பாடிடவே
காரானை வேழ முகத்தவனே
காப்பா ய் நீயும் அமைவாயே

நூல்

**இருசீரிரட்டை சமநிலைச் சிந்து**

அன்பு மனத்தவளே - வாராகி
ஆளும் இனத்தவளே
இன்பம் எலாந்தருவாய் - வாராகி
என்றனைக் காத்திடுவாய். 1

## ஆனந்தக் களிப்பு

காக்கும் கருணைவா ராகி - அம்மா
கைமேல் பலன்தரும் அன்புப் ரவாகி
வாக்கில் உயிர்கொடு தாயே - நீ
வள்ளல் அறிவேன் வரமருள் வாயே! 2

## முச்சீரிரட்டை சமநிலைச் சிந்து

வாயால் உனைப்பாட வேண்டும் - குரல்
வாகாக நீதரல் வேண்டும்
தாயாய்ப் பரிந்திட வேண்டும் - பெருஞ்
சாதனை நான்செய வேண்டும்
3

**ஆனந்தக் களிப்பு**

வேண்டும்வேண் டும்வேண் டும் அம்மா - பெரும்
வெற்றிமேல் வெற்றிமேல் வெற்றியே வேண்டும்

யாண்டும் உன தரு ளாலே - பெரும்
ஆக்கங்கள் காணுவேன் நானும் மேன்மேலே! 4

## நாற்சீரிரட்டை சமநிலைச் சிந்து

மேலே நிலைத்திட வேண்டிய சிந்தை - இன்றோ
வீணாய் அலைகிற பொய்மனக் கந்தை
ஆலாய்ப் பறந்தே அடிக்கிறோம் பந்தை- இந்த
ஆட்ட த்தில் எத்தனை எத்தனை நிந்தை 5

## ஆனந்தக் களிப்பு

நிந்தைகள் பட்டது போதும் - எந்த
நேரத்தும் நீக்கிடு பொய்மையும் சூதும்
சிந்தையை நீ தெளிவாக்கு - என்னுள்
சேர்த்திடு தெய்வத நன்னெறி நோக்கு 6

## ஐஞ்சீரிரட்டை சமநிலைச் சிந்து

நோக்கம் சுயநல மின்றிப் பொதுநலம் பேணிடவும் - ஏதும்
நொம்பலம் இன்றியே என்றனின் கொள்கைகள் ஊன்றிடவும்
வாக்கு கொடுத்திடு வாராகி தேவியே மாமணியே - தினம்
வாழ்ந்திடும் வாழ்க்கை அர்த்தம் உளதென்று மாண்புறவே!7

## ஆனந்தக் களிப்பு

மாண்பில் உயர்ந்திடும் தேவி - நீதான்
வாழ்க்கைக் கடிகாரம் ஓடிடச் சாவி
நாண்தானே வில்லுக்கு உத்தி - அந்த
நாணெனத் தந்திடென் சொல்லுக்குச் சக்தி 8

## எழுசீரிரட்டை சமநிலைச் சிந்து

சக்தி மிகுந்திடும் சக்தியே ஸ்ரீபுரம் சார்ந்து வதிந்திடும் தேவியே - பெரும்
தண்டனை ஈபவள் ஆகினும் பத்தரைத் தாங்கிப் புரந்திடும் நாயகி

யுக்தி மிகுந்திட யுத்த களத்திலே ஓங்கி அடிக்கும் தளபதி - உனை
உள்ளத் திருத்திப் பணிகிறோம் உன்பதம் இன்றி
இலையெமக் கோர்கதி! 9

## ஆனந்தக் களிப்பு

ஓர்கதி யாகிடும் தாயே - என்றும்
உன்னை நினைக்கும் நெறியருள் வாயே
தேர்ந்தனை என்றனை நீயே - என்ன
செய்வதற் கென்றுன்றன் வாய்திறப் பாயே! 10

## அறுசீரிரட்டை சமநிலைச் சிந்து

திறந்தால் கதவை வெளிச்சம் தேடி அகத்தில் நுழையும் - அதுபோல்
திறந்த மனத்தால் தொழுதால் இறைவி மனமும் மகிழும்
அறிந்து சிரத்தை யுடனே அவளைத் தொழுகிற போது - தேவி
அருளைத் தருவாள் பொருளைத் தருவாள் இதுவோ
தப்பாது 11

## ஆனந்தக் களிப்பு

தப்பா சரியாவென் றேதும் - நானும்
தன்னால் அறியாமல் ஏதுசெய் போதும்
அப்போ பிழைகரு தாது - நீயும்
அன்பாய்ப் பரிவுகொள் தாயே என்மீது
12

## ஐஞ்சீரிரட்டை சமநிலைச் சிந்து

என்மீது கோபம் கொள்ள எத்தனையோ உண்டு -எனில்
என்தமிழ் மீது மிக்க ஆர்வத்தைக் கொண்டு
உன்னையே பாடவைத்தே என்பழி தீர்ப்பாய் - இதுபோல்
ஊருலகி லுண்டோ சொல்? செய்தனைநல் வார்ப்பாய் 13

## ஆனந்தக் களிப்பு

வார்த்தாளி வாராகி தேவி - தேக
வன்மைதா நீயுமுன் கையாலே நீவி
பார்த்தாலே போதுமப்போது - பண்டைப்
பாவமும் நீங்குமுன் பார்வைக் கொப்பேது? 14

## நாற ்சீரிரட்டை சமநிலைச் சிந்து

ஏதுள்ள தென்றென்றும் எண்ணி யெண்ணியே- காலம்
ஏகம் கழிகிறது வாதம் பண்ணியே
யாதுள்ள தென்றெண்ண யாதவசியம் ?- அம்மா
ஆக்கம் பெறத்தருவாள் நல்ல வசியம் 15

## ஆனந்தக் களிப்பு

நல்ல வசியமே தேவை - உன்றன்
நல்லருளால் நீ இயக்கிடென் நாவை
சொல்லைக் கடந்ததோர் சோதி - உன்றன்
சொற்கள் தானே எங்கள் வாழ்க்கைக்கு நீதி 16

## முச்சீரிரட்டை சமநிலைச் சிந்து

நீதி அளிக்கின்ற வன்மை - நல்ல
நேசம் கொடுக்கின்ற தன்மை
யாதும் வரமாகும் நன்மை - அவள்
ஆங்காரி ஆயினும் மென்மை. 17

## ஆனந்தக் களிப்பு

மையமாய் உன்றனைச் சுற்றி - அன்று
வானவர் போரிட்டார் கிட்டிற்ரு வெற்றி
வையகம் வாழவைப் பாயே - உன்றன்
வாழ்த்தால் அமைதி நிலவட்டும் தாயே! 18

## இருசீரிரட்டை சமநிலைச் சிந்து

தாயே வராகமுகி - லலிதை
சைனியச் சேனாபதி
நாயேன் பிழைபொறுத்தே - எனக்கு
நல்குவாய் நல்லகதி 19

## ஆனந்தக் களிப்பு

நல்ல கதியென்றால் முக்தி - அந்த
ஞானத்தை நோக்கி நீ தந்திடு சித்தி
வல்லமை வேண்டும்நற் தெம்பு- அம்மா
மாறாமல் வேண்டும் நினதருள் அன்பு. 20

## நூற்பயன்

வாராகி இரட்டை மணிமாலைச் சிந்து
பாராயணம் செய்யக் காப்பளருள் தந்து
வாராத நலமெல்லாம் தாம்வந்து சேரும்
தீராத நோயெல்லாம் குணமாகித் தீரும்

# வாராகி உலக்கை விருத்தம்

போராடி வந்திடும் தீராப் பகைவரைப்
போட்டுப் புரட்டி வீழ்த்தும்
பொல்லாங்கு செய்தவர் புல்லாகப் போயிடப்
பூமிக்குள் தள்ளி ஆழ்த்தும்
சாராத நெஞ்சினர் யாரா யிருந்தாலும்
தள்ளிப் புடைபுடைக்கும்
சண்டைக் களத்தினில் கண்ட இடத்தெலாம்
தாக்கி நடுநடுக்கும்
சேராத மேலுமி நேராக வேறாகத்
தீட்டிப் புடைப்பதென்ன
சிந்தைக்குள் வந்துள கந்தைகள் யாவையும்
சீக்கிரம் வேறாக்கிடும்
வாராப் பகைவரைச் சீறி வழிகண்டு
வாரிக் களத்தடிக்கும்
வாராகி கைகளில் நேராய்ப் பிடித்துள
வஜ்ஜிர வல்லுலக்கை

தண்டநா தாகையில் தண்டம் கொடுத்திடத்
தண்டுகொண் டேயிருக்கும்
சக்கரம் போலவே அக்கரை இக்கரை
தானாய்ச் சுழல் விரிக்கும்
அண்டிப் பணிவோரின் சிண்டினில் அன்னையின்
ஆசியைக் கொண்டு சேர்க்கும்
ஆகாத பேர்களை வேகாத வெய்யிலில்
ஆடவிட்டே யுருக்கும்
அண்டங்கள் யாவிலும் செண்டு புடைத்திடும்
அட்டகா சம்புரியும்
ஆகாசம் பாதாளம் வாகாகச் சென்றிடும்
அச்சம் விளைத்திருக்கும்

மண்டலம் எங்கிலும் கண்டனம் என்னவே
மக்களைச் சொல்ல வைக்கும்
வாராகி கைகளில் நேராய்ப் பிடித்துள
வஜ்ஜிர வல்லுலக்கை.



# வாராகி மகிட விருத்தம

தன்முதுகில் வாராகி அமர்ந்துள்ளாள் என்றே
தருக்கிமிகப் பெருமிதமாய்ச் சுற்றிவரும் நன்றே
அன்னையவள் ஆணையொன்றே அதுவேற்றுச் செல்லும்
அதன்வழியில் எதிர்ப்பட்ட பகைவர்கலைக் கொல்லும்
மின்னுகிற கொம்பிரண்டும் குத்தீட்டி ஆகும்
வெஞ்சமரில் எதிர்ப்பட்ட அவுணர்குழு சாகும்
முன்புவர பகை போகும், தத்தகிட தகிடம்
மூர்க்கமுள வாகனமே வாராகி மகிடம்

வேகமுடன் வீசிவரும் மகிடத்தின் வாலாம்
வீச்சொன்றில் வீழுபவர் ஆயிரத்தின் மேலாம்
கூகைகழு கெல்லாமே அதன்பக்கம் சுத்தும்
கொல்லுகிற பேர்சடலம் அவைவிரும்பிக் கொத்தும்
ஆகம்நிறை அன்பர்கட்கு  ஆசிகளை நல்கும்
அதனாலே நல்வளங்கள் தாமாக மல்கும்
வாகையின்றி வேறெதுவும் அறியாத மகிடம்
வாராகி ஏறிவரும் மகிடமதே மகிடம்

# வாராகி குங்குமம்

குங்குமமாம் குங்குமம்
குளுமையான குங்குமம்
எங்களம்மை வாராகி
ஏற்றமிகு குங்குமம்
நெற்றியிலே வைத்திட
நிம்மதியைத் தந்திடும்
வெற்றியினை நாளெலாம்
வேட்கையுடன் தந்திடும்

மஞ்சளிலே செய்வதால்
மங்கலங்கள் நல்கிடும்
விஞ்சுமெழில் குங்குமம்
மேலான குங்குமம்

வகிட்டினிலே வைத்திட
மரணபயம் போக்கிடும்
சுகங்கொடுக்கும் குங்குமம்
துயர்கெடுக்கும் குங்குமம்

புருவமத்தி வைத்திட
பொசுக்கும் தீய சக்தியை
அருள்கொடுக்கும் குங்குமம்
அருமையான குங்குமம்

பத்திரமாய்க் காத்திடும்
பரிவுமிக்க குங்குமம்
வைத்திருக்கும் குங்குமம்
வாழவைக்கும் குங்குமம்

குங்குமமாம் குங்குமம்
குளுமையான குங்குமம்
எங்களம்மை வாராகி
ஏற்றமிகு குங்குமம்



# மயிலை வாராகி சவ்வாது விடு தூது

உலகம் அனைத்தும் உருண்டோட வைத்தே
இலகும் இயக்கம் இயற்றி - நலமாய்
அடியாரைக் காத்திடும் அம்மைவா ராகி
படியாரை வேரறுத்துப் பக்தர் - இடர்தீர்க்கும்
தேவி திருப்பாதம் சென்று தரிசிக்கும்
ஆவலில் இவ்விடத்தே ஆர்க்குமனக் - கூவலையும்
இன்னும் ஒருபிறவி இன்றி அவள்பாதம்
தன்னில் கிடந்து தரிசிக்கும் - உன்னதமாம்
முக்தி நிலைவேண்டும் மொய்ம்பினையும்
அக்கறையாய்ச் சென்றே அறிவிப்பார் பக்கத்தே
யாருள்ளார் என்றே அலசினேன் நேரெதிரே
கூருள்ள கத்தி, குடுவைகள் - யாரெதனைச்
சொன்னாலும் கேட்பதனைச் சொல்லும் கிளிப்பிள்ளை
மின்னும் ஒளிப்புறா வேல்கம்பு முன்னீடாய்
என்னவுண் டென்றே இயம்புபுகழ்ச் சவ்வாது
இன்னும் பலவும் இருந்தனவால் - என்னபொருள்
என்றனுக் கேற்றதென எண்ணியே நான்பார்த்தேன்
சின்னஞ் சிறுகத்தி சீற்றத்தில் - என்னென்ன
செய்யும் எனவே தெரியாது. வேறிடம்
எய்தக் குடுவைகளுக் கேலாது - மொய்கிளியோ
வேறெவரின் பேச்சை விரும்பி அதைப்பிடித்தே
கூறிவிட்ட செய்தியினைக் கூறாது - மீறுமெழில்
மாடப் புறாவுக்குச் சீட்டெழுதிக் கால்கட்டி
தேடிச் செலும்போது சிக்கிவிட்டால்--- நாடுகிற
செய்திபோய் வேறிடத்தே சேர்ந்துவிடும்-வேல்கம்போ
கொய்து தலையெடுக்கும், கூடாது - மெய்யாகச்
சவ்வாதுக் கேலுமோ, சற்றேநாம் சிந்திப்போம்
எவ்வா சனையினிலும் ஏற்றதென - இவ்வொன்றே
நல்வா சனையாக ஞாலம் கருதுவதும்
பொல்லாத போரினிலே போராடி- அல்லாத

வாசம் உடலிடைத் தோன்றுவதால் வாராகி
பூசும் மணங்களிலும் சவ்வாதே- வீசுவதைப்
போக்குமென எண்ணியே பூசுமொரு நல்லதொரு
நோக்கமும் உள்ளதால், நுட்பமாய்- வாய்க்கின்ற
தூதாகச் செல்லுதற்குச் சொல்லலாம் ஈதொன்றே
தோதாய் அமையுமெனத் தோத்திரங்கள்- மீதூர
வேண்டி விழைந்து மிகநெருங்கி யான் சொன்னேன்
ஆண்டவனும் வேட்கைகொளும் அற்புதமே- வேண்டுகிறேன்
என்றனோர் தூதாய் எனக்குதவக் கோருகிறேன்
உன்றன் பெருமை உலகறியும்,- மன்னர்களும்
உன்றனைப் பூசி உவகை மிகக் கொள்வர்
சென்ற விடமெல்லாம் சிறப்புத்தான் - உன்றனுக்கு
போற்றும் புகழ்சேர் புனுகுப்பூ னைவாலில்
வீற்றிருந்து பின்னர் வெளிப்போந்து - வேற்று
மணத்தையெலாம் வீழ்த்திவிட்ட மாண்புடையோய் உன்னை
வணங்கிநான் வேண்டுகிறேன் வாழ்த்தி, - இணங்கிநீ
என்றனுக் காக இணையில்வா ராகியின்பால்
சென்றென்றன் செய்தி தெரிவித்தால் - நன்றென்றே
எண்ணுகிறேன், வேறெவையும் ஏற்றமுற உன்னைப்போல்
கொண்டுசெலும் ஆற்றலினைக் கொள்ளவில்லை -
விண்பறக்கும்
மாடப் புறாவுக்கு வக்கணை போதாது -
கூடக் கிளியதுவோர் கோமாளி - வாடுகிற
சந்தனத் துக்குன்போல் சாமர்த்தி யம்மில்லை
முந்தியங்கு செல்லுமுன் முற்றும் உலர்ந்துவிடும்
என்பதனால் சவ்வாதே ஏற்றம் உளபொருளே
அன்புடன் தூதாய் அனுப்புகிறேன் - என்னாலே
உன்பெருமை கூறுதற் கொண்ணாது நானுமிங்கே
என்சொல்லால் ஏதோ இயம்புகிறேன் - முன்பொருநாள்
பூனையின் வாலில் புனுகு மெழுகானாய்
பூனை மலமென்றே பொல்லாதார்- ஆனதொரு
கற்பனையை ஏற்றிக் கதைக்கின்றார். வாசனை
முற்படச் சந்தன மும்புனுகில்- பொற்புடனே
சேர்த்துன்னைச் சவ்வாதாய்ச் செப்புகிறார் நல்மணத்தின்

வார்ப்பே, மணவரசி, மாண்பொருளே- பேர்பெற்றோய்
எங்கேநீ உள்ளாயோ அங்கெல்லாம் வாசனைதான்
பொங்கும் நறுமணந்தான், பூவாசம் - மங்கப்
புதுவாசம் உன்வாசம், போகுமிட மெல்லாம்
இதுவாசம் என்றே இயம்பி- மதித்திடுவார்
என்பதனால் என்தூதாய் இன்றேநீ சென்றிடுக
என்னசெய்தி சொல்வதென்றும் எங்கேபோய்- அன்னதைச்
சொல்வதென்றும் செப்புகிறேன். , தூக்கும் மணமுடையோய்
வெல்மணமே, சவ்வாது வித்தகமே - நல்லுறவே
வாராகி அம்மை வலிமை மிகவுடையாள்
சூராதி சூரர்களும் தோல்வியுறத்- தேரேறி
ஆர்ப்பரித்துக் கொல்லும் அதிகச் சினமுடையாள்
தேர்த்தட்டில் நின்று சிலுப்பியவள் - போர்க்களத்தில்
ஆயிரம் காதம் அதிரடிக்கும் - கையிலுள்ள
பாயுலக்கை கொண்டு பகைவர்களின் ஆயத்தம்
தாக்கி அவர்கூட்டம் வேரறுத்து மீளாத
வாக்கில் வினைமுடிக்கும் வித்தகியாள் - நீக்கமற
எவ்விடத்தும் கண்ணில் எதிர்ப்பட்டுச் சக்திகளை
அவ்வவ் விடத்தினிலே ஆட்டுவிப்பாள்- இவ்விதமாய்
உள்ளவள்பால் கோபம் உடையவள்பால் எப்படிநாம்
தள்ளாடி நிற்காமல் சாந்தமாய்க்- கொள்ளும்வகை
செய்தியினைச் சொல்வதெனத் திண்டாட்டம் தேவையில்லை
உய்வளிக்கும் தெய்வமவள், உள்ளத்தில் - பொய்யாத
பக்தி யுடையவர்பால் பாசம் மிகவுடையாள்
சக்தி கொடுப்பாள், தயவாக - எக்கணத்தும்
காக்கும் அருளுடைய காருண்ய நாயகியாள்
வாக்குக் கொடுப்பாள், வரம்கொடுப்பாள்- தாக்கவரும்
பூதம் பிசாசுகளைப் போட்டுக் கசக்கிடுவாள்
போதம் அளிப்பாள் புகழ் கொடுப்பாள், -வாதியினைப்
பேதலிக்க வைத்துப் பெருவெற்றி தான் கொடுப்பாள்
நீதிப் படிநடப்பாள், நேயமுள்ளாள் - சாதனைகள்
செய்யென்று சொல்லித் திறம் கொடுப்பாள், அச்சத்தைக்
கொய்தழிக்க வைப்பாள், குலையாத - தைரியத்தை
உள்ளுக்குள் எப்போதும் உட்கார வைத்திடுவாள்

தெள்ளத் தெளிவான தீர்வுகளைக் - கொள்ளென்றே
சிந்தை தெளிவாக்கித் தேகம் திடமாக்கி
எந்தப் பொழுதும் எதிரிருப்பாள்- வந்தித்தே
அம்மா எனவே அடியிணையைப் பற்றிவிட்டால்
நம்பாரம் தானேற்கும் நாயகியாள்,- செம்மாந்தே வாராகி
தொண்டனென வாய்நிறையச் சொல்லிடலாம்.
சீராக வாழ்வு செழிக்கவைப்பாள் - நேரான
எண்ணம் கொடுத்தே இனிமை பலகொடுத்தே
விண்ணவன் போலே விளையாட- மண்ணகத்தே
நல்லருளைத் தந்திடுவாள், நாடகமாம் இவ்வாழ்வில்
சொல்வதை யெல்லாம் துலக்கிடுவாள்- வல்லமைகள்
வாரி வழங்கிடுவாள், வாராகி என்றேநாம்
தீரமாய்ச் சொல்லிச் சிலிர்த்திடலாம்- நேரினிலே
பன்றி முகமுடையாள், பல்லிரண் டும் வளைவாய்
முன்னே விளங்குமெழில் மூக்குடையாள் - தன்முகத்தில்
நீண்டயிரு கண்கள் இருபக்கத் தேயிருக்க
கூண்டு கவிழ்த்த கிரீடத்தாள் - காண்டற்குச்
சற்றே சினமுள்ள தன்மை தெரிந்தாலும்
முற்றிலும் அன்பிலே மூழ்கியவள் - பற்றுடையாள்
குன்றாய் நிமிர்தோள்கள் கோலத்தைக் கண்டுவிட்டால்
ஒன்றா மனமுமதில் ஒன்றிவிடும் - குன்றுகளாய்க்
கொங்கை இருபுறமும் கொண்டு நிமிர்ந்திருக்கச்
சங்குக் கழுத்துடையாள், சக்கரம் - அங்கையில்
பற்றி யிருக்கிறவள், பாங்காக ஆயுதங்கள்
வெற்றி கொடுக்கவென வீற்றிருக்கும் - கொற்றமுள
வில்லம்பு , கேடயம், மேவும் திருவுலக்கை
வல்ல கலப்பையொடு வாள்கதையும்- வெல்லரிய
சூலமும் தாமரையும் தோதாய்க் கரங்களிலே
கோலங்கொள் கின்ற கொலுவரசி - சால
வரத கரமும் அபய கரமும்
அருளுதற் கென்றே அமைய- உரங்கொள்
வயிறுடையாள், வாகாய் மலர்க்கொப்பூழ் மேலே
உயர்மே கலைபூண்ட ஒண்மை - உயிரிடையாள்
வைரத் தொடையழகி வஜ்ஜிரக் காலழகி

வைரிகளைத் தாக்கியே வாகாய் உயிரெடுக்கும்
மோதுமுழங் காலழகி, மொய்ம்புத் திறம்கொண்ட
பாதங்கள் பற்றிப் பகர்ந்திடவா - ஏதங்கள்
தீர்க்கும் திருப்பாதம் தீரம் மிகுபாதம்
சேர்க்கும் அருட்பாதம், திண்ணென்றே - ஆர்க்கும்
ஒருசமயம், ஆகாயம் தாண்டி அளக்கும்
ஒருசமயம் , அண்டினோர் வாழ- அருளும்
ஒருசமயம், மென்மை ஒருசமயம் வன்மை
ஒருசமயம், வேகத்தில் வேகம் - ஒருசமயம்
வீரத்தோ டேயூன்ற விண்ணதிரும் மண்ணதிரும்
நேரத்தே செய்கை நிகழ்த்திவிடும், - பாரத்தை
ஏற்றுப் புரக்க இயம்பிவிடில் தாமரையாய்
மாற்றம் எடுத்து வளமருளும்- போற்றுபுகழ்
பாதங்கள் கொண்டிலங்கும் பரிவுத் திருத்தெய்வம்
மாதங்கம் கொண்டிலங்கும் வாராகி - போதமருள்
மாதா லலிதாவின் மாண்புப் படைத்தலைவி
பாதார விந்தம் பணிந்துநாம்- வாதாடும்
போதில் வழிகாட்டும் பொற்புடையாள், வார்த்தாளி
நீதி வழங்கும் நெறியுடையாள், சோதியினால்
வட்ட த் திகிரியினால், வார்க்கும் பளபளப்பால்
எட்டியே தேரில் இயங்குவதால் - சுட்டெரிக்கும்
வெம்மையினால் சூரியனாய்த் தோன்றுகிற வாராகி
அம்மை பிறையைச் சிரமணிந்து - நம்மையெலாம்
வாழ்த்திக் குளிர்விக்கும் மாட்சியினை என்சொல்ல?
ஊழ்வினைத் தீமைகளை ஓர்பக்கம் தாழ்த்திவிட்டு
நன்மை புரிகின்ற நாயகி, பாரதத்தில்
இன்பத் தமிழ்நாட்டில் ஏற்றமிகு - சென்னையில்
காற்றுக் கவிதை கடலுக்குப் பாடுகிற
ஆற்றல்மிகு வேலைக் கருகினிலே - போற்றும்
மயிலை நகரில் அபிரா மபுரம்
அயலே கிழக்கில் அமைந்த - நயங்கொள்
முதல் தெருவில் பச்சையம்மன் ஆலயத் துள்ளே
இதமுடைய வாராகி அம்மன் - பதம்பணிந்தே
வேண்டியே செய்தி விளம்பிடுக- இன்னொன்று

ஆண்டு விடிகாலை சென்றிட வேண்டாம்.
அதிகாலைப் போதினில் அவ்வா லயத்தில்
பதிவாக அன்னதா னத்தை- நிதமும்
வழங்குவதால் கூட்டமங்கு வந்திருக்கும் ,நீயும்
வழிபார்த்துப் பத்து மணிக்குக் குழைவாக
"நான்வந்தேன் சவ்வாதென் றேசொல்லித் தாள்பணிக
வான்புகழ் உன்மணத்தில் வாராகி -தான்மகிழ்ந்தே
உன்னை வரவேற்பாள் உற்சாக மாய்த்தடவி
என்சொல்ல வந்தாய் எனக்கேட்பாள்- முன்னிருந்தே
"அம்மையே வாராகி, அன்புமிகக் கொண்டவளே
உம்மிடம் செய்தி உரைக்கின்றேன் - எம்பால்
இலந்தைக் கவிஞன் இயம்பிவிட்ட செய்தி
நலமாக உம்பால் நவில்வேன் - நிலவுலகில்
எல்லோரும் நன்றாய் இருக்க வரம்கொடுப்பாய்
பல்லோரும் போற்றிடப் பாரதம் - வல்லரசாய்
ஓங்கித் திகழ உனதருளைத் தந்திடுவாய்
பாங்காய்த் தமிழ்நாடு பல்வளமும் - நீங்காதே
பெற்றுப் பரிமளிக்கப் பேரருளை வேண்டுகிறேன்
ஒற்றைத் தலைவலியாம் ஊழலெனும் - குற்றத்தைச்
செய்தேயெம் தாய்நாட்டைச் சீரழிப்பார் யாரெனினும்
கொய்தவரை மாய்த்துநீ கூத்திடுக - உய்யும்வகை
காட்டி எமையென்றும் காத்திடுக, வெற்றிகளைக்
கூட்டி விருதுகளைக் கொண்டுவந்து நீட்டிடுக
நல்லதொரு முக்தியினை நல்கிடுக - என்றுரைத்தே
வல்லமைசேர் குங்குமம் வாங்கிவா - எல்லோரும்
குங்குமம் பெற்றுக் குறையின்றி வாழட்டும்
இங்குநீ செய்கின்ற இத்தொண்டால் பொங்குமணம்
இன்னும் பெருகி இணையில்லை என்றேநீ
என்றைக்கும் வாழ்க இனிது.

# வாராகி திருக்கண் இயல் வகுப்பு

தனதனன தந்த தத்த தனதனன தந்த தத்த
தனதனன தந்த தத்த தானனா

விதியெனநி னைந்து நித்தம் மிகமனமு ழன்றி ருக்கும்
வினைகெட நிமிர்ந்தி ருக்க லாகுமே
விதவித நலங்கள் மெச்சும் விருதுகள் வளங்கள் பெற்று
மிகவிசைகள் வந்து மொய்த்து மீறுமே!
பதவிகளி தம்கொ டுக்கும் பலர்புகழ்ந லங்கள் கிட்டும்
பயனுறவ ளங்கொ ழித்து மேவுமே
பழிவருமி டங்கள் பொத்தி இசைபெறுமி டந்தி றக்க
பளபளவி தம்சி றக்க லாகுமே
கதிகலங்கி நைந்தி ருக்க எதிரிபலம் நைந்து பொக்க
கதியடைந்து வென்றி ருக்க வேலுமே!
கரிவனம்பு குந்து மெத்த நெடுவழிந டந்திருட்டில்
கடிபயம்தொ லைந்தி ருத்தல் சாலுமே!
எதிர்வரும் எமன்ப டைக்கு நலிகிறப யந்து ரத்தி
எவனெனமு னைந்து வெற்றி பேசலாம்
இவைதவி ரவும்ப லத்த இனியவைக ளும்கி டைக்கும்
இதைமனம்கொ ளும்பெ ருத்த பாருளீர்
பதமடர்ந் துதைந்து சுற்றி, படைகடந்து முந்து சக்தி
பகைவரை ந டுங்க வைத்த நாரியாள்
பதம்நினையு மன்ப ருக்கு சகலநன்மை தந்து நித்தம்
பயன்தருநி மிர்ந்த சக்தி நேரியாள்
அதமளிவெம் பன்றி தெத்து வளைநெடுமுன் தந்த ரெட்டை
அழகியமு கம்ப டைத்த மேனியாள்
அகிலமெங்கும் சென்று சுற்றி அடுதிறலில் முந்து சக்தி
அனலெனப் பொழிந்து வெற்றி கூடினாள்

மிதம்கடந்த வன்வி சுக்கி ரனின்தலையை முன்சி தைத்தே
வெகுசினமி குந்தி ருக்கும் மோழலாள்
மிகமகிழ்ந்து பஞ்ச மிக்கு விரிபெருமை தந்த சக்தி
மிகுமெழுவர் பெண்டி ருக்கு ளைந்தினாள்
இதம்கனிய அன்ப ருக்கு மிகவெளிய ளென்ன முற்றும்
இனியளென வந்தி ருக்கும் கோதையாள்
எழிலையும் வரந்தி ருக்கை அருளையும் அருந்தி
ருக்கண்
இயலையும் நினைந்தி ருக்க வாருமே!

# வாராகி பன்னிரு திருநாமங்கள்

*உபாசனையில்லாமல் வாராகியை வழிபடமுடியாதா என்று கேட்பவர்களுக்காக இந்தப்போற்றி. வாராகியின் பன்னிரு திருநாமங்களைப் போற்றி இசைப்பதன் மூலம் அம்மன் அருளைப் பெறலாம்.*

ஐந்தாவ திடமிருக்கும் **பஞ்சமி**யே போற்றி
ஆணை **தண்ட நாதா**வே தளபதியே போற்றி
மந்தணங்கள் கொண்டவளே **சங்கேதா** போற்றி
வளர்காலம் ஆளும்**சம யேஸ்வரி**யே போற்றி
முந்துநெறி யாள்**சமய சங்கேதா** போற்றி
முன்னிருக்கும் **வாராகி போத்ரிணி**யே போற்றி
அம்மை**சிவா வார்த்தாளி மஹாசேனா** போற்றி
**ஆக்ஞாசக் ரேஸ்வரி**யே **அரிக்கினி**யே போற்றி

(மந்தணம்- இரகசியம்)



# வாராகி தாலாட்டு

ஆராத அமுதே என் அன்பே தாலேலோ
அழகுமிகக் கொண்டவளே அரசி தாலேலோ
வாராகி வார்த்தாளி வரமே தாலேலோ
வராகமுகி வராகமுகி வடிவே தாலேலோ
வாராத செல்வமென வந்தாய் தாலேலோ
வாழ்விக்க வந்தவளே மகவே தாலேலோ
கூரான தந்தங்கள் கொண்டோய் தாலேலோ
குலம்விளங்க வந்தவளே கோவே தாலேலோ

அன்னைலலி தாம்பிகையின் செல்லம் தாலேலோ
ஆயுதங்கள் கையெடுக்கும் அருளே தாலேலோ
மின்னுமொளி கண்களிலே கொண்டோய் தாலேலோ
வேகமுடன் காலுதைக்கும் மின்னே தாலேலோ
சின்னதொரு தூளிக்குள் சேர்ந்தாய் தாலேலோ
திரிலோகம் வளர்சக்தி பெற்றோய் தாலேலோ
முன்னொளிரும் நெற்றிக்கண் கொண்டோய் தாலேலோ
முக்கண்ணி மோகினியே முத்தே தாலேலோ

ஆனைபலம் கொண்டவள்நீ ஆனாலும் கைக்குள்
அடங்கியொரு குழந்தையென ஆனாய் தாலேலோ
சேனைநடத் திடுவதென பொம்மைகளை யெல்லாம்
செப்பமுடன் அணிவகுக்கும் திருவே தாலேலோ
வானமழும் மண்ணுமழும் வளரண்ட மெல்லாம்
வருந்தியழும் நீயழுதால் அழவேண்டாம் கண்ணே
ஆனவிந்தை அண்டத்தைக் கிலுகிலுப்பை ஆக்கி
ஆட்டுகிறேன் நீகேட்டு மகிழ்வாய் என் கண்ணே!

பால்தருவேன் பழந்தருவேன் பரமே தாலேலோ
பாரடியில் கிழங்கெடுத்துத் தருவேன் தாலேலோ
கோல்தருவேன் உலக்கையென வைத்துக்கொள் பெண்ணே
கொடுங்கலப்பை வில்லம்பு நான்தருவேன் கண்ணே

மேல்சுழலும் சக்கரமும் கதையோடு பூவும்
விளையாட நான் தருவேன் ஆடிடுவாய் கண்ணே
கால்விரித்து நீபடுத்தால் துணிகிழிந்து போகும்
கால்மடக்கிப் படுத்துக்கொள் என்செல்லப் பெண்ணே!

உன்விழிகள் சிவப்பதுமேன் என்னருமைக்◌் கண்ணே
ஓங்குசினம் கொள்ளுவதேன் வாராகிப் பெண்ணே
உன்கழுத்தில் போடுதற்கு நவரத்ன மாலை
உனக்காக அனுப்பியுளாள் லலிதாம்பா தேவி
என்னயிது வரம்கொடுப்ப தென்ன உன்றன் கையை
இப்படிவைத் துள்ளாயோ, என் தெய்வம் நீயே
என்னரசி என் தெய்வம் இதமே தாலேலோ
எங்கள்குல நாயகியே இறையே தாலேலோ

தாலேலோ தாலேலோ ஓ தண்ட நாதா
தாலேலோ தாலேலோ நீயெல்லாம் தாதா!



# வாராகி வரவு

ஆடிவரா வாராகி
ஆயுதங்கள் கையெடுத்துத்
தேடிவந்த நமக்கெல்லாம்
தெரிசனம் கொடுப்பதற்கு - ஆடிவரா

கரத்தினிலே பேருலக்கை இன்னொருகை யில்கலப்பை
கதையெடுத்து வாளெடுத்து வில்லெடுத்து வருகிறா
கிரிசக்ர ரதமேறி கிடுகிடுக்க வருகிறா
கிர்ரென்று சக்கரத்தைச் சுழலவிட்டு வருகிறா

ஆடிவரா வாராகி
ஆயுதங்கள் கையெடுத்துத்
தேடிவந்த நமக்கெல்லாம்
தெரிசனம் கொடுப்பதற்கு - ஆடிவரா

கண்களிலே செம்மையொளி கால்களிலே சதங்கையொலி
கால்தூக்கித் தரையுதைத்துக் கண்டவர்கள் நடுநடுங்க
விண்ணதிர வெற்பதிர விரிகடலும் தானதிர
வேகவேக வேகமாக வீரக்குதி போட்டுக்கொண்டு

ஆடிவரா வாராகி
ஆயுதங்கள் கையெடுத்துத்
தேடிவந்த நமக்கெல்லாம்
தெரிசனம் கொடுப்பதற்கு - ஆடிவரா

அம்மையவள் வருகையிலே அஞ்சாமல் பார்க்கவேண்டும்
அமர்க்களத்துக் காட்சிகளை அடியவர்க்குக் காட்டுகிறா
பொம்மைகளாய் அண்டங்களைப் பூப்பந்தாய் எடுத்தாடி
பொல்லாத மகிஷத்தின் மேலேறி வருகின்றா

ஆடிவரா வாராகி
ஆயுதங்கள் கையெடுத்துத்
தேடிவந்த நமக்கெல்லாம்
தெரிசனம் கொடுப்பதற்கு - ஆடிவரா
**

எட்டுத் திசையும் நடுங்க - கண்டார்
எண்ண மெல்லாம் ஒடுங்க
கொட்ட மடக்கிட வட்டமடித்தெங்கும்
சட்டச் ச ட ச ட த் தாளம் முழக்கியே

ஆடிவரா வாராகி
ஆயுதங்கள் கையெடுத்துத்
தேடிவந்த நமக்கெல்லாம்
தெரிசனம் கொடுப்பதற்கு - ஆடிவரா

வளைந்த பல்லால் கீறி-பகை
வாட்டும் கோபம் மீறி
நெட்ட நெடுவுரு எட்டியெட்டிச் செல
திட்டமிட்ட படி சீறி வருகிறா

ஆடிவரா வாராகி
ஆயுதங்கள் கையெடுத்துத்
தேடிவந்த நமக்கெல்லாம்
தெரிசனம் கொடுப்பதற்கு - ஆடிவரா
**

சாந்த மாக வரவேண்டும் தாயே - இந்தச்
சன்னிதிக்கு வரவேண்டும் நீயே
பாந்த மாக நாங்களெல்லாம்
பயப்படாதிருக்கும் படி

ஆனந்தமாய் ஆடிவருவாயே - வந்தே
ஆசிகளை அள்ளித் தருவாயே

ஆனந்தமே கொண்டுநாங்கள்-
அம்மா உனை வரவேற்போம்
சாந்த மாக வரவேண்டும் தாயே - இந்தச்
சன்னிதிக்கு வரவேண்டும் நீயே

ஆடி வரா வாராகி
ஆனந்த மாகவிங்கே
தேடிவந்த நமக்கெல்லாம்
தெரிசனம் கொடுப்பதற்கே

ஆனந்த மாக வாரா
ஆசிகளை அள்ளித்தாரா
வான ந்த மான அம்மா
மண்ணிறங்கி வாரா வாரா

ஆடிவரா வாராகி
ஆனந்த மாக வரா
ஆடிவரா வாராகி
ஆன ந்த மாக வாரா!



# வாராகி ஆற்றுப்படை

ஏராள வாதங்கள் எளிதாக வெல்கிறாய்
எப்படி இது சாத்தியம்
எங்குநீ கற்றனை தர்க்கசாத் திரங்களை
என்றெனைக் கேட்கும் நண்பா
வாராகி பக்தர்கள் வாதத்தில் வெல்வது
வழக்கமே புதியதிலையே!
வாராகி தந்ததோர் பிச்சைதான் நானிங்கு
வாதத்தில் வெல்லுகின்றேன்
நேராக நீதஞ்சைப் பெரிய கோயில் செல்க
நீள்வளா கந்தன்னிலே
நேசமாய் நல்லருள் செய்திடும் வாராகி
நேர்சன்ன திசெல்லுக
தாராள மாகவே ஜபதபம் செய்தபின்
தாயினை நீ வேண்டுக
சாதனை யாய்நீயும் வாதிலே வெல்லலாம்
சந்தேகம் இதிலில்லையே!

# கிரிசக்கர ரத விருத்தம்

எங்கெங்கு நோக்கினும் அங்கங்குத் தோன்றிடும்
எதிரியைத் திணறடிக்கும்
எவ்வள வாயினும் அவ்வள வாம்தொலை
வெண்ணுமுனே சென்றிடும்
அங்கங்கள் மீதினும் ஆகாயம் மீதினும்
அஞ்சாமல் தான்நடக்கும்
அட்டகா சம்செயும் ஆரவா ரம்செயும்
ஆங்காரத் தோற்றம் கொளும்
பங்கங்கள் இல்லாமல் வெங்கோபம் கொண்டதாய்ப்
பாய்ந்தெங்கும் தானோடிடும்
பரிகளும் எதிர்வரும் கரிகளும் நடுங்கிடப்
பம்பர மாய்ச் சுழற்றும்
கங்கங்கு சுற்றுதோ காற்றங்கு சுழலுதோ
காலனோ என்றஞ்சிடக்
கருதரிய வாராகி கிரிசக்க ரம்மம்மை
கண்ணசைப் பில் ஓடுமே!

# வாராகி சரண சிருங்க ரஹித வெண்பா

## கால், கொம்பில்லா ஸ்துதி

நடராஜப்பெருமானைச் சுற்றியிருக்கும் நந்திக்குக் கொம்பு விசேஷம், வியாக்ரபாதருக்கும் ப்ருங்கிக்கும் கால் விசேஷம். நான்காமவர் பதஞ்சலி பாம்பின் உருவாகையால் காலும் இல்லை கொம்பும் இல்லை. நந்தி கொம்பே அதிகம் வரும் ச்ருங்க (கொம்பு) ஸ்துதி செய்தார். மற்ற இருவரும் கால் (துணைக்கால்) அதிகம் வரும் சரண ஸ்துதி செய்தார்கள். பதஞ்சலி கால், கொம்பில்லா தனது பெருமையைக் கூறி சரண ஸ்ருங்க ரஹித ஸ்துதி செய்தார். ரஹிதா என்றால் இல்லாத என்று பொருள். இந்தக் கொம்பு கால் அமைப்பில் சமஸ்கிருத்திற்கும் தமிழுக்கும் வேறுபாடு உண்டு. தமிழில் உயிரெழுத்துகளில் கொம்புமில்லை காலுமில்லை. ஒற்றைக் கொம்பும் இரட்டைக் கொம்பும் எழுத்துகளின் தலைமேல் வளைந்த கொம்புகளும் (கி, தி, தீ போன்றவை கொம்பெழுத்துகள்தாம். சிலர் கி, தி, கீ போன்றவற்றைக் கொம்பெழுத்துகளாகக் கருதுவதில்லை. இங்கே அதிகால், அதிகொம்பு , காலும் கொம்பும் இல்லாத ஸ்துதிகளுக்கு நான் எழுதிய பாடல்களைத் தருகிறேன்.

# 1 ஸ்ரீ வாராகி சரண துதி(அதிகால் துதி).

நேரிசை வெண்பா.

ஒவ்வொரு சீருக்கும் குறைந்த பட்சம் ஒரு கால் வரவேண்டும்

ஏராளம் தாராளோ? தாராளம் தாராளோ
வாராவோ, சேராவோ வாகாக? - தீராது
சீராகத் தாவென்றே செப்பத்தான் வேண்டுவதோ
வாராகி தாவாயேன்? வா!

(தாவாயேன் - தாவா ஏன்,? தாவாயேன்

# ஸ்ரீவாராகி கொம்பு வெண்பா

ஒவ்வொரு சீருக்கும் குறைந்தது ஒரு கொம்பு வேண்டும்( கொ, கோ, கி, கீ போல)

கொடுப்பாள், கொடுமையின் கொட்டம் பொடிப்பாள்
தொடுப்பாள், நலம்செய் தொழில்கள் - திடமெடு
தேக வடிவொடு தெளிவாகச் சொற்களை
வேகம் கொடுத்திடுவா ளே!

## ஸ்ரீ வாராகி சரண ச்ருங்க ரஹித ஸ்துதி

கால், கொம்பில்லா வெண்பா

இணக்க உளமுடன் எண்ணத்துச் சுத்த
மணமுற அன்பு மலரக் - கணங்கள்
முழுதும் அவளகத் துள்வர உன்னுள்
வழுத்தத் தருவள் வரம்.

இ என்பது கொம்பில்லை

# வாராகி நடுவெழுத்தலங்காரம்

பல விகற்ப நேரிசை வெண்பா

நதிமீன் மணம்மீன்தாய் மன்மதன் நன்றே
பதியூறு காய்படையில் வாழ்க்கை- துதிசெய்
பனிவல்லல் கல்லமை கான்நமை மாடு
பசுவிமை என்றே பகர்.

| சொல் | பிரதி | நடு | முதல் கடை |
|---|---|---|---|
| நதி | பவானி | வா | பனி |
| மீன் | வரால் | ரா | வல் |
| மணம் | அகில் | கி | அல் |
| மீன் | கயல் | ய | கல் |
| தாய் | அம்மை | ம் | அமை |
| மன்மதன் | காமன் | ம | கான் |
| நன்றே | நன்மை | .ன் | நமை |
| ஊறுகாய் | மாவடு | வ | மாடு |
| படை | பரசு | ர | பசு |
| இல்வாழ்க்கை | இம்மை | ம் | இமை |

**வாராகியம்மன் வரம்**

இன்னொரு வகை

நதிமீன் மணம் மீன் தாய் மன்மதன் நன்றே
பதியூறு காய்படையில் வாழ்க்கை - துதிசெய்தே
ஆராய்ந்து மத்தி யமையப் பெறுவோமே
வாராகி யம்மன் வரம்

(அடுத்தடுத்து வரும் சொற்களின் பொருளில்
நடுவெழுத்துகளைத் தொகுக்க வரும் சொற்றொடர்

நடுவெழுத்தலங்காரம். எ.கா நதி - பவானி என்பது ஒரு நதி அதன் நடுவெழுத்து வா. இப்படி மற்றச் சொற்களின் பொருளின் நடுவெழுத்தைத் தொகுத்தால் (வாராகி அம்மன் வரம்) என்று வரும் .
முதல் வெண்பாவில் நடுவெழுத்தை எடுத்து விட்டால் விஞ்சும் சொற்கள் என்னென்ன என்பதை மூன்றாவது நான்காவது அடிகளில் காணலாம்

இரண்டாவது வெண்பா ஆராய்ந்து மத்தி

யெழுத்துகளைச் சேர்த்தால் "வாராகி யம்மன் வரம்" என்று வரும் என்று சொல்கிறது

# அஸ்வாரூடா பந்தம்




**அசுவாரூடா அமர் வாகன மேகவேகமே**
**விசுவ அசுவமென விரைவாய் போற்றி!**



# வாராகி இரத பந்தம்

இதற்கான பாடல் அடுத்த பக்கத்தில்

# வாராகி இரதபந்தம்

இரத பந்தத்திற் கான பாடல்கள்

சக்கரங் களுக்கான இன்னிசை வெண்பா

வாதாயே நின்னடிக்கீழ் புன்தலையே வைத்திருப்பேன்
மாதாவென் தேவையே தாவாயே தாள்பணியு
மென்பா லருளைத்தா தாராள மாகவே
நின்னருளைத் தாதாயே வா!

மேல்பகுதிக்கான பல விகற்ப இன்னிசை வெண்பா

வாதாயே நீ வந்தால் நான்மிகவா யென்னம்மே
வாராகி என்னுள் புகுந்தபரா சத்தியம்மே
ஆதர வாய்வேண் டுவேனுனை யேதாயே
போத மமைகிற தெம் பு

பிரித்து

வாதாயே நீ வந்தால் நான்மிகவாய் என்னம்மே
வாராகி என்னுள் புகுந்த பராசக்தி யம்மே
ஆதரவாய் வேண்டுவேன் உனையே தாயே
போதம் அமைகிற தெம்பு

# வாராகி அட்டநாக பந்தம்




**ஒவ்வோர் நாகத்திள்ளும் உள்ள சொற்றொடர்**

அருள்க வாராகி
தருக நற்பொருளே




# வாராகி இரட்டை நாக பந்தம்

# இரட்டை நாக பந்தம்

## இன்னிசை வெண்பா

தண்டநா தாவைச் சரணடை அன்பனே
வண்ணமய மாகிடும் வாழ்வு வசதிவரும்
சத்தான வாழ்வு சமையும் சுகமாக
வத்தாத செல்வம் வரும்

இரட்டை நாகங்களின் உச்சியிலிருந்து கீழாகப் படித்தால் "**வசதிவரும்**" என்னும் சொற்றொடர் வரும்

# வாராகி ஐம்பாகி-பகுபங்கி

கட்டளைக் கலித்துறை

அன்னையே வாராகி ஆதி  முதலே அருள்கின்றவள்
தன்னையே தாராளம் நீதி விதியே தருகவென்றேன்
உன்னினேன் ஏராளம் ஓதி இதயம் உருகிநின்றேன்
என்னுளே சீராகும் போதம் பதிந்தே இருந்திடவே
இது கட்டளைக் கலித்துறைப் பாடல்

| | | | | |
|---|---|---|---|---|
| அன் னையே | வாராகி | ஆதி | முதலே | அருள்கி ன்றவள் |
| தன்னை யே | தாராள ம் | நீதி | விதியே | தருக வென் றேன் |
| உன்னி னேன் | ஏராளம் | ஓதி | இதயம் | உருகுகி ன்றேன் |
| என்னு ளே | சீராகும் | போதம் | பதிந்தே | இருந்தி டவே |

கட்டளைக்கலித்துறை ஐந்தாகப் பிரிகிறது. இதன் தமிழ்ப்பெயர் ஐங்கிளை

**சீர் விருத்தம்**

அன்னையே
தன்னையே
உன்னினேன்
என்னுளே 1

**சீர் விருத்தம்**
வாராகி
தாராளம்
ஏராளம்
சீராகும்

**சீர்விருத்தம்**
ஆதி
நீதி
ஓதி
போதம்

**சீர்விருத்தம்**
முதலே
விதியே
இதயம்
பதிந்தே

**சீர்விருத்தம்**
அருள்கின்றவள்
தருகவென்றேன்
உருகுகின்றேன்
இருந்திடவே

## இவைதவிர துணைக்கிளைகள்

**வஞ்சித் துறை**
அன்னையே வாராகி
தன்னையே தாராளம்
உன்னினேன் ஏராளம்
என்னுளே சீராகும்

**வஞ்சி விருத்தம்**

அன்னையே வாராகி அருள்கின்றவள்
தன்னையே தாராளம் தருகவென்றேன்
உன்னினேன் ஏராளம் உருகுகின்றேன்
என்னுளே சீராகும் இருந்திடவே

**கலிவிருத்தம்**

அன்னையே வாராகி ஆதி தருகின்றவள்
தன்னையே தாராளம் நீதி தருகவென்றேன்
உன்னினேன் ஏராளம் ஓதி உருகுகின்றேன்
என்னுளே சீராகும் போதம் இருந்திடவே

**வஞ்சித்துறை**

அன்னையே தருகின்றவள்
தன்னையே தருகவென்றேன்
உன்னினேன் உருகுகின்றென்
என்னுளே இருந்திடவே

**கலிவிருத்தம்**

அன்னையே வாராகி முதலே அருள்கின்றவள்
தன்னையே தாராளம் விதியே தருகவென்றேன்
உன்னினேன் ஏராளம் இதயம் உருகிநின்றேன்
என்னுளே சீராகும் பதிந்தே இருந்திடவே

கலிவிருத்தம்

வாராகி ஆதி முதலே அருள்கின்றவள்
தாராளம் நீதி விதியே தருகவென்றேன்
ஏராளம் ஓதி இதயம் உருகிநின்றேன்
சீராகும் போதம் பதிந்தே இருந்திடவே

**வஞ்சி விருத்தம்**

ஆதி முதலே அருள்கின்றவள்
நீதி விதியே தருகவென்றேன்
ஓதி இதயம் உருகிநின்றேன்
போதம் பதிந்தே இருந்திடவே

**வஞ்சித்துறை**

முதலே அருள்கின்றவள்
விதியே தருகவென்றேன்
இதயம் உருகிநின்றேன்
பதிந்தே இருந்திடவே

**வஞ்சித்துறை**

அருள்கின்றவள் வாராகி
தருகவென்றேன் தாராளம்
உருகிநின்றேன் ஏராளம்
இருந்திடவே சீராகும்

# வாராகி அனுக்கிரக ஸ்தவம்

( மொழியாக்கம் - இலந்தை சு இராமசாமி)

1 நீநிற அல்லி நிறத்தவ, நிறைந்த முகுட பயங்கரி
ஆன உலக்கை கலப்பையை ஆயுத மாகத் தரித்தவ,
மேனிலை பக்தர்க் கருள்பவ, மெலியிடை, நீல விழியினாய்
ஏன வதனி, கனதன எழிலினாய், போற்றிஓம் போற்றியே!

2 அடியவர் துன்பம் பயநிலை அகமுறும் தீய பிசாசுகள்
வடிவறு முண்டம் பிணமென யாவும் தகர்த்தே ஒழிப்பவ,
தடையறு செல்வம் அருள்பவ, சமரில் பகையினை வெல்பவ
நடமிடும் அண்டம் இயக்கிடும் நாயகி போற்றிஓம் போற்றியே!

3 தனது நி யில் அமர்ந்துநீ சார்ந்தவர் தம்மைப் புரக்கிறாய்
கனமனத் தாக்கம், அஞ்சுதல், பரபரப் புள்ள பிணிநிலை
நினதருள் நீக்கிப் புரந்திட நின்னடி யார்முன் பகைவரைக்
கனலாய் எரித்துத் தகர்க்கிறாய், கருணையே போற்றிஓம்
- போற்றியே

4 சமர்விளை யாட்டா பந்தடித் தாடிடும் ஒன்றா என்னவே
அமர்விளை யாடும் அம்மையே அணியுலக் கையால் வேகமாய்
இமைத்திடும் முன்னர் வீழ்த்தியே ஏர்கலப் பையால் உழுகிறாய்
அமைவிரை தன்மை என்சொல? அம்மையே போற்றிஓம்
போற்றியே

5 அன்னாய் நிலைக்கும் இடத்தினாய் அருமென் கரத்தின்
விசையினால்
முன்னும், வலமும் இடமும்பின் எங்கணும் சுற்றி அடிப்பதை
பின்னரும் சற்றே தளர்த்தியே பிழையுணர் கின்ற பகைவரை
இன்னரும் அன்பால் புரந்திடும் அம்மையே , போற்றிஓம்
போற்றியே!

6 தன்னிடம் நின்று சமர்செயும் தரியலர் தம்மைத் தகர்க்கிறாய்
முன்னர் உதிரம் குடிக்கிறாய் மதுவுண் டுயிரை அளிக்கிறாய்
முன்புரள் நீண்ட முடியினாய் சண்டமுண் டா முன்
னிருக்கிறார்
அன்னை பலியை விரும்புவாய் உன்பதம் போற்றிஓம்
போற்றியே!

7 முதலை நிகர்த்த கரத்தினால் முந்திடும் நான்கு கடல்களை
அதம்முன் தடுக்கும் ஊழியில் அரக்கனும் சண்டை இடுகையில்
கதகத வென்றே குகைகளில் கதித்திடும் ஆழப் பாதளம்
விதவிதக் கோடி முறைகளில் வென்றவ போற்றிஓம்
! போற்றியே!

8 கருகரு காட்டில் கடகளி றாபுலி பேயா பிசாசமா
திருடரா,உள்ளம் திடுக்கிடச் செய்திடும் பூதக் கருப்பதா?
ஒருநொடிக் குள்ளே ஓடிடும் உன்னருள் நாமம் உரைக்கவே
அருள்நிறை தேவி அடியவர் தெய்வமே, போற்றிஓம் போற்றியே!

9 இந்த வராக முகிஸ்தவம் தன்னையே ஆழ்ந்த பக்தியால்
சிந்தை திளைத்துப் படிப்பவர் கொள்ளுவார் வெற்றி ஆயிரம்
விந்தைக் கவிதை, பொருள்நலம், நல்வளம் தேவ சுகங்களும்
முந்தும் புகழும் ஆயுளும் சிறந்திட வாழுவர் உண்மையே!

வாராகி நாமம்

நேரிசை வெண்பாவின் குறைந்த பட்ச எழுத்தெண்ணிக்கை 43. அப்படிக்குறைந்த பட்ச எழுத்தெண்ணிக்கையோடு வாராஹியின் நாமம் சொல்லும்படி எழுதப்பட்ட வெண்பா

வாராகி நாமமே மாறாது கூறவே
வாராத யோகமே சேருமே - தாராள
மாகவே யாவுமே தாமாக ஏலுமே
ஆகவே நீதொழ வா!

வாராகி( குறள் வெண்பா-58 எழுத்துகள்)

பார்த்துணர்ந்தேன், தேர்ந்துணர்ந்தேன் வாழ்ந்துணர்ந்தேன் கூர்த்துணர்ந்தேன்

சேர்ந்துணர்ந்தேன் சேர்த்துணர்ந்தேன் வார்த்து -

வாராகி அருளைப் பார்த்துணர்ந்தேன், இதுவா அதுவா எனத் தேர்ந்துணர்ந்தேன், தந்திரங்களை வாழ்ந்துணர்ந்தேன், சுயசிந்தனையால் கூர்த்துணர்ந்தேன், எல்லாவற்றையும் தொகுத்துப் பின்னர் கவிதையில் வார்த்தேன் என்பது பொருள்

குறள் வெண்பா–19 எழுத்துகள்.

வாரா கியுனை வரவு விழைவனே
ஏராள மாகநா னே -- 19

# நன்றி

இந்நூலில் உள்ள பாடல்களை அவ்வப்போது படித்து ஆலோசனை வழங்கியும் ஊக்குவித்தும் ஆசி வழங்கியும் பாராட்டிய எனது ஸ்ரீவித்யா குரு அமரர் ஆனந்தாந்த நாதர் அவர்களுக்கும் குருபத்னி ஆனந்தாம்பாள் அவர்களுக்கும் இந்நூலில் உள்ள பாடல்கள் சிலவற்றைச் சந்தவசந்தம் கூகுள் குழுமத்தில் வெளியிட்ட போது பாராட்டியும் திருத்தங்கள் வழங்கியும் ஊக்குவித்த சந்தவசந்தம் அன்பர்களுக்கும் மயிலை வாராகி மைந்தன் அவர்களுக்கும், வாராகி பாடல்களை எழுதச் சொல்லி ஊக்குவித்த அன்பர் ஸ்ரீகாந்த் அவர்களுக்கும் வாராகி அனுக்கிரகாஷ்டகத்தை உரைநடையாக மொழியாக்கம் செய்தளித்து நான் அதைக் கவிதையாக்க உதவிய என் மகன் திரு.
சீநிவாசராகவனுக்கும் எனது நன்றி.

அன்புடன்,
இலந்தை சு. இராமசாமி

# வாழ்த்து மங்கலம்

ஏனமா வதனம் வாழ்க
எழில்மிகு கண்கள் வாழ்க
கூனிடாத் தனங்கள் வாழ்க
குன்றுயர் தோள்கள் வாழ்க!
ஆனவெண் கரங்கள் வாழ்க
ஆயுதம் உலக்கை வாழ்க
வானுயர் தோற்றம் வாழ்க
வாராகி அடியார் வாழ்க!

